# ஈழத்துப் புலிகளுடன் இருபத்தெட்டு நாள்

(உரைவீச்சுகள்)

பேராசிரியர்

**சாலை இளந்திரையன்**

முனைவர் சாலினி இளந்திரையன்
*பேரவை இல்லம்*
11, திருவீதியான் தெரு
கோபாலபுரம், சென்னை-86

முதற் பதிப்பு : 6-9-1992
ஆசிரியரின் பிறந்தநாள் வெளியீடு

ஈழத் தமிழ்ப் புலிகளின் ஏற்றம் பாடும்
120 உரைவீச்சுகளின் மணித் தொகுப்பு

விலை ரூ. 15-00

TWENTY EIGHT DAYS
WITH THE TIGERS OF EEZHAM

By
Prof SAALAI ILANTHIRAIAN
Peravai Illam, Sennai-600 086, India

அச்சிட்டோர் :
சாலை அச்சகம், 11, திருவீதியான் தெரு
கோபாலபுரம், சென்னை-600 086.
தொ. பே. 477820
[சாலை 284]

# பயப்படாதீர்கள்,
# இந்தியத்தார் பயப்படாதீர்கள்!

பயப்படாதீர்கள்! புத்தகத்தின் தலைப்பைப் பார்த்துப் பயப்படாதீர்கள்! கடலோரப் பாதுகாப்புக்குக் கொண்டு வந்து குவிக்கப்பட்டுள்ள கத்திமுனைத் துப்பாக்கிப் படை வீரர்கள் பயப்படாதீர்கள்! 'நம்முடைய ரோந்துகளையும் மிரட்டல்களையும் மீறி இந்த மனிதர் (சாலையார்) எப்படி ஈழத்துக்குப் போய் வந்தார்?' என்று பதறித் துடித்துப் பயப்படாதீர்கள்! 'என்னதான் இதயம் வளையாத வேழமாக இருந்தாலும், மூன்று நோய்களால் உடம்பு முடக்கப்பட்டுக் கிடக்கும் இந்த முதிய மனிதரே புலிகளிடம் போய் விட்டு வந்துவிட்டாரென்றால், இந்தத் தமிழகத்து ஆறு கோடியில் எத்தனை பேரை நாம் தடுத்து நிறுத்தப் போகிறோம்?' என்று பயப்படாதீர்கள்! 'ஆயுதம் எதுவும் தரிக்காத இந்த அறிவு மேதையே நம்முடைய கட்டுக்காவலை மீறி ஈழத்துக்குள் நுழைந்துவிட்டார் என்றால், கையிலே ஏ. கே. 47-ம் கழுத்திலே உயிர்த்தியாகக் குப்பியும் ஏந்திய ஈழ மறவர்கள் எத்தனை பேர் இங்கே வந்து புகுந்திருக்கிறார்களோ?' என்று பயப்படாதீர்கள்...

பயப்படாதீர்கள்! மாவீரப் புலி மறவர்களைக் கொள்ளைக்காரர்கள் என்றும் கொலைகாரர்கள் என்றும், நாக்கிலே நரம்பில்லாமல் நச்சுத்தனம் பரப்பியே வயிறு வளர்க்கும் தமிழகத்து அரசியல்வாதிகள் பயப்படாதீர்கள்! 'இவர் அங்கே போயிருந்தார் என்றால்,— 28 நாட்கள் புலிகளுடனேயே குடியிருந்தார் என்றால்,— நம்மைப் பற்றிப் புலிகளிடம் இவர் என்ன என்ன சொன்னாரோ, நம்முடைய வீட்டு முகவரியையும் நாம் அன்றாடம் போய் வரும் 'வீடு'களின் விலாசங்களையும் விலாவாரியாகத்

தெரிவித்து நம்முடைய உயிருக்கே வெடி தயாரித்துவிட்டு வந்திருப்பாரோ?' என்று நினைத்து நினைத்து, உங்கள் நெஞ்சாங்குலையையே அலைத்துக் குலைத்துக் கொள்ளாதீர்கள்!

பயப்படாதீர்கள்! 'என் உயிருக்குக் குறிவைத்திருக்கிறார்கள்! இதோ இவர் உயிருக்குக் குறி வைத்திருக்கிறார்கள் புலிகள்' என்றென்று ஏமாற்று விளம்பரம் செய்தே காலம் தள்ளும் இங்குத்தி அரசியல்வாதிகள் பயப்படாதீர்கள்! 'இவர் எடுத்துச் சொன்ன போதெல்லாம் நாம் கேட்கவில்லையே,—இவர் எச்சரித்த போதெல்லாம் நாம் திருந்திக் கொள்ளவில்லையே,-தமிழுக்கும் தமிழருக்கும் எதிரான தடத்திலேயே தடா தடா என்று குதித்தோமே,— 'இந்த உடம்பு உருப்படாது, ஏ. கே. 47 எடுத்து இதை முடித்து வையுங்கள்' என்று அந்த இளையவர்களிடம் இந்த முதியவர் இறுக்கமாகச் சொல்லிவிட்டு வந்திருப்பாரோ?' என்று பயப்படாதீர்கள்!

1992 பிப்ரவரி 9 முதல் மார்ச் 7 வரை உள்ள இந்த 28 நாட்கள் மட்டுமல்ல,- ஈழ விடுதலைப் போராட்டம் தொடங்கிய நாளிலிருந்தே, அது ஆயுதப் போராட்டமாக உருவெடுப்பதற்கு முன்னிருந்தே நான் புலிகளுடன்தான் இருக்கிறேன்; ஈழ விடுதலைப் போராட்டம் என் வாழ்வின் ஒரு பகுதியாகவேதான் நடந்து வந்திருக்கிறது. 1950-51 முதலே, இந்த வரலாறு தொடர்ந்து நடந்து கொண்டிருக்கிறது. ஆகவே, விசைப்படகில் ஏறியோ விமானத்தின் இறக்கைகளில் குந்தியோ, பாக் நீரிணையைக் கடந்து என்னுடைய ஈழத்து மறவர் மக்களிடம் மறைவாகச் சென்று வரவேண்டிய தேவை எனக்கு என்றைக்குமே ஏற்பட்டதில்லை. எனவே,— 'அங்கே போன இவர் பாஸ்போர்ட் எடுத்தாரா, விசா வாங்கினாரா?' என்றெல்லாம் வீணான விசாரணையிலே யாரும் ஈடுபட வேண்டியதில்லை. நான் எங்கே இருந்தாலும்,— எப்போதும் ஈழப் போர் முனையிலேதான், என் இளைய வீரர்களுடன்தான்



இருக்கிறேன்! புரிகிறதா? என் இதயம் இங்கே இல்லை,— அங்கேதான் இருக்கிறது!

'அப்படியானால் என்ன இந்த 28 நாள்?' என்று மருட்சி அடைகிறீர்கள் அல்லவா? பயப்பட வேண்டாம்: இதிலே மர்மம் எதுவும் இல்லை...

ஈழத்தமிழ் விடுதலையை ஆதரித்து வன்மையாக எழுதிக் கொண்டே இருக்கிறேன்; வாய் நிறையப் பேசிக் கொண்டே இருக்கிறேன்; வாய்ப்பு நேரும்போது, எங்கள் அறிவியக்கப் பேரவையின் சார்பிலோ மற்றுள்ள நெடுமாறன், பெருஞ்சித்திரன் போன்ற தமிழ் ஆர்வலர்களுடன் கூட்டிணைந்தோ ஈழத்தமிழ் விடுதலைப் போராட்டத்துக்கு ஆதரவான ஊர்வலங்கள், ஆர்ப்பாட்டங்கள், நெடும் பயணங்கள், மாநாடுகள், மனிதச் சங்கிலிகள் என்பவைகளை, ஒன்று மாற்றி ஒன்று நடத்திக் கொண்டுதான் இருக்கிறேன். இந்த நிகழ்ச்சிகளிலெல்லாம்,— மத்திய மாநிலப் புலனாய்வுத்துறை அதிகாரிகளும் மற்றுள்ள காவல்துறை அதிகாரிகளும் தவறாமல் பங்குகொண்டு தங்கள் தங்கள் அரசுகளுக்குக் குறிப்புகளை அனுப்பிக் கொண்டுதான் இருக்கிறார்கள். அங்கே கொஞ்சம் அயர்ந்து இருந்துவிட்டவர்கள்,- பக்தர்கள் தங்கள் இட்ட தேவதையின் கோயிலுக்கு மாதாந்தம் போவது போல,— என் குடியிருப்பு இடமாகிய பேரவை இல்லத்துக்குப் பதிவாக வந்துகொண்டுதான் இருக்கிறார்கள்.

இவர்களெல்லாம் தங்கள் வேலையைத் தவறாமல் செய்வது போலவே நானும் என்னுடைய வேலையைத் தவறாமல் செய்து கொண்டு இருக்கிறேன். அவர்கள் என்னைப் பற்றி அரசுக்குத் தேவையான குறிப்புகளைத் தயாரித்து அனுப்புகிறார்கள்; அது அவர்களின் வேலை. நானும் ஈழத்தமிழ் விடுதலைப் போராட்டத்தை வியந்து வியந்து நினைத்துக் கொண்டும், வீர வார்த்தைகளால் எழுதிக் கொண்டும், வருவோர் போவோரிடமெல்லாம்

பாராட்டிக் கொண்டுமே இருக்கிறேன்; இவை என்னுடைய
வேலைகள்.

இவ்வளவு சொன்ன பிறகும் அந்த 28 நாள் மர்மம்
துலங்கவில்லையல்லவா? சிலர் ஊகித்திருப்பீர்கள்; மற்ற
வர்கள் மருண்டு மருண்டு, மூளை இருந்தால் அதைக்
கசக்கிப் பிழிந்துகொண்டு இருப்பீர்கள். இதோ, அந்த
மர்மத்தை நானே உடைத்துவிடுகிறேன்...

நாற்பது ஆண்டுகளுக்கும் மேலாக, நாள்தோறும்
நினைத்துக் கொண்டிருக்கிற விடுதலைப் போராட்டத்
தோடு வேறு பணிகளையும் செய்து கொண்டே இருக்
கிறேன். இந்த 28 நாட்களுக்கும் கடந்த 40 ஆண்டுகளின்
நாள்களுக்கும்,-திடீரென்று 9-2-92 தொடங்கி ஒரு பெரிய
வேறுபாடு ஏற்பட்டுவிட்டது. அதாவது, காலை எழுந்து
பல் துலக்கியும் துலக்காமலும் அன்றாடம் ஒரு எட்டுப்
பத்துப் பக்கங்களாவது எழுதுவதே என் வாழ்க்கை நாள்
களின் தொடக்கமாக இருந்து வந்திருக்கிறது. இப்போதெல்
லாம் நான் சொல்லச்சொல்ல என் சாலினியார் அதை
எழுதிக் கொள்ளும் வழக்கம். இலக்கியமோ வாழ்வியலோ -
ஏதோ ஒன்றைப் பற்றி அல்லது பலவற்றைப் பற்றி
ஒவ்வொரு நாளும் எழுதிக் கொண்டு இருந்தேன். இந்த
வரலாறு 9.2.92ல் சட்டென்று மாறியது. அன்றைக்கு
அய்ந்து உரை வீச்சுகள் மட்டுமே எழுதினேன். அத்தனையும்
ஈழத்தமிழ் விடுதலைப் போராட்டம் பற்றியவை; அதிலே
புலித்தம்பிகளின் நடமாட்டம் பற்றியவை! அன்று
தொடங் 7.3.92-ல் எழுதிய5 உரை வீச்சுகள் வரை,
அனைத்தும் ஈழத்தமிழ் விடுதலைப் போராட்டத்தைப்
பற்றியவைகளே!

9.2-92 முதல் 7-3-92 வரை உள்ள இந்த 28 நாட்களில்
தமிழ் ஈழ விடுதலைப் போராட்டத்தையும் விடுதலைப்
புலிகளின் வீரசாகசங்களையும் தவிர வேறு எதைப் பற்றி
யும் நான் எழுதவில்லை. ஆகவே என்னுடைய எண்ணத்தி



லும் எழுத்திலும் விடுதலைப் புலிகளே முழுமையாக வீற்றி
ருந்த அந்த நாட்களை 'விடுதலைப் புலிகளுடனேயே இருந்த
நாட்கள்' என்று குறிப்பிட்டேன். இந்தப் புத்தகத்தில்
வரும் உரைவீச்சுகளைப் படிக்கும்போது, நான் சொல்வது
எந்த அளவுக்கு உண்மை என்பதை நீங்களே அறிந்து
கொள்ளுவீர்கள்.

எனவே பயப்படாதீர்கள்; நான் அங்கே போய்வந்து
விட்டேனோ என்று பயப்படாதீர்கள். இப்படி உங்களுக்
கெல்லாம் நான் அடைக்கல மொழி பகருவதால், 'அப்
பாடா விட்டது கவலை' என்று நெடுமூச்சு விட்டுக்
கொண்டு நீளப் படுத்து விடாதீர்கள். தமிழீழ விடுதலைப்
புலிகளிடம் நான் போகவே மாட்டேன் என்று முடிவுகட்டி,
என்னைப் பற்றிய கண்காணிப்புக் கோப்பை மூலையிலே
போட்டு விடாதீர்கள். நிச்சயமாக ஈழத்துப் புலிகளிடம்
போவேன்; நான் அவர்களை நினைத்து மகிழ்வது போல,
அவர்கள் எங்களைப் பார்த்து மகிழும் ஆர்வப் பெரும்
காட்சி நல்கும் விதமாக என் சாலினியாரோடு நான் அங்கே
போவேன்.

எப்போது? இதிலே ஒன்றும் கமுக்கம் இல்லை. என்னு
டைய வாழ்க்கை நடவடிக்கைகளில் மறைப்பு எதுவும்
இல்லாதது போலவே, இதிலும் எந்த மறைப்பும் இல்லை.
தனித்தமிழ் ஈழ வெற்றிக்கொடி ஈழத்திலே ஓங்கிப் பறக்கும்
போது, தளர்ந்து போன உடம்பிலே புதிய தெம்பு வரப்
பெற்றுத் தமிழ் ஈழத்துக்குள் தமிழ்ப் பெரு வேழமாக
நெஞ்சு நிமிர்த்தியவாறே நடப்பேன்! அந்த நாள், விரைவி
லேயே, வெகு விரைவிலேயே வருகிறது. அதுவரை, இதோ
'ஈழத்துப் புலிகளுடன் 28 நாள்...'

சாலய் இளந்திரயன்

சென்னை-86
69-1992

## ஈழப் புலிகளுக்கு எழுச்சி வாழ்த்து!

'தம்பி' என்று நான் அழைத்துத்
 தழுவி மகிழ, ஒரு
வெம்புலியே நீ கிடைத்தாய்,—
 வீரமலர் வாழிய நீ!

நூற்றாண்டு பலவாகத்
 தூர்ந்துவிட்ட பழங்கிணற்றில்
ஊற்றாக உயர்ந்தவனே,
 ஒளி வீச்சே வாழிய நீ!

'ஏட்டில் படித்தபுகழ்
 எம் புகழே' என்றெழுதிக்
காட்டிய என் புலியேறே,
 கண்மணியே, வாழிய நீ!

துப்பாக்கி என்றாலே
 துடைநடுங்கும் வரலாற்றைச்
சட்டென்று திருத்திவிட்ட
 தடந்தோளே வாழிய நீ!

ஆயிரம் ஆண்டல்ல,
 ஈராயிரம் ஆண்டு
போயபின்னே பூத்த தமிழ்ப்
 புது வீறே வாழிய நீ!

வாழியரோ வாழி,
 வளம்பெற்ற தமிழ்வீரம்!
ஈழத் தமிழ் வளர்த்த
 இனமானம் வாழியரோ!

—நவம்பர், 1987

-சாலையாரின்-

# "ஈழத்துப் புலிகளுடன் 28 நாள்"



# இந்தியத் தமிழ்த்தாய் இப்படிப் புலம்புகிறாள்

எல்லாத் தாய்களும் இதயம் குளிர்வார்கள்—
குழந்தையின் முதலாவது அழுகுரல் கேட்டு
எல்லாத் தாய்களும் இதயம் குளிர்வார்கள்!...
இந்தத் தாய்—
இந்தியத் தமிழகத்திலே ஒரு தாய்,
அதே குரல் கேட்டு ஏங்குகிறாள்!
'எனக்கு வந்த இந்த மகன்
இந்த மண்ணிலே வந்து பிறந்தானே!' என்று
இதயம் புழுங்கிப் புழுங்கி ஏங்குகிறாள்!...

'வீரத்தை இழந்துவிட்ட மண்,
வெற்றி குவிப்பதை மறந்துவிட்ட மண்—
அதுவே இந்தியத் தமிழகத்து மண்!
அந்த இடிமண்ணிலே
வந்து பிறந்தானே என் மகன்!' என்று
வாயினால் புலம்ப முடியாமல்
மனத்துக்குள்ளே குமைந்து குமைந்து புலம்புகிறாள்!
புலம்பலோடு புலம்பலாக—
'இப்போதுதானே பிறந்தான் இவன்,—
ஈழத் தமிழ் மண்ணிலே பிறந்திருக்கக் கூடாதா?'
என்றென்றும் ஏங்குகிறாள் இந்தத் தாய்...

சுற்றி நிற்கும் பழைய தாய்கள்
சொல்ல முடியாத அவளுடைய ஏக்கத்தைப்
புரிந்து கொள்ள முடியாமல் புலம்புகிறார்கள்;
அவளுடைய ஏக்கத்துக்கு இவர்களும் புலம்புகிறார்கள்!

9-2-92

## சொல்லத் தகாதன சொல்வதோ நீங்கள்?

வறண்ட மண் என்று சொன்னார்கள்;
வட இலங்கைத் தமிழ் ஈழத்தை
வறட்சியான நிலப்பரப்பு என்று சொன்னார்கள்!
பார்க்கப் போயிருந்த போது—
வரிசை வரிசையான பனைகளைக் கண்டு,
நானும் அப்படித்தான் நினைத்தேன்...

1983 அதைப் பொய்யாக்கி விட்டது:
அடலேறுகள் வெடித்துக் கிளம்புகிற மண்ணை
வறண்ட மண் என்று யார் சொல்லுவார்கள்?
உரிமைப் பேருணர்ச்சியைப்
பாத்திகட்டி வளர்த்து வந்திருக்கிற மண்ணை
வறண்ட மண் என்று எவர் சொல்லுவார்கள்?
ஈழத்தில் பிறந்த வீரப்பயிர்
எல்லா உலகத்துக்கும் மேலே கதிர்விடுகிறது!
இத்தனை உயரமான நெற்பயிர்—
இவ்வளவு கனமான நெற்கதிர்—
வறண்ட மண்ணிலே வளர்வது உண்டா?

ஏன் வாயடைத்துப் போனீர்கள்?
உங்கள் அறிவியல் கணக்கு முறிந்து போனது என்ன?
தான் வாழப் பிறந்து
தமிழுக்கே புதுவாழ்வு தருகின்ற வீரத்தைத்
தன் மடியில் வளர்க்கின்ற தமிழ் ஈழத்தை
வறண்ட மண் என்றா சொன்னீர்கள்?
வாயை மூடுங்கள்,—ஓடிப் பிழைத்துக் கொள்ளுங்கள்!

9-2-92



## அம்மாவின் வடிவம் ஒன்றே ஒன்றுதானா?

இந்தியத் தமிழகம் என் தாயகம்தான்—
இல்லை என்று சொல்லமாட்டேன்!
ஏன் சொல்ல வேண்டும்?—
இந்த மண்ணில்தானே நான் பிறந்தேன்?
என் இனத்துக்கே உரிய
ஏற்றமிகு சீற்றத்தோடுதானே பிறந்திருக்கிறேன்!

என்றாலும் தோழர்களே,—
என்னைச் சுற்றி நிற்கும் தமிழர்களே,
இந்தியத் தமிழகம்
என்னுடைய பிறப்புத் தாயகம்
அது போதுமா,—போதாது அல்லவா?
எனவே இணைத்தேன் மற்றொரு தாயகம்—
வளர்ப்புத் தாயகம்,—என் வாழ்வுத் தாயகம்!
அதுதான் ஈழத் தமிழகம்—
அதோ,—அங்கே—
உலகோங்கிய வீரத்தை
ஒவ்வொரு நாளும் வளர்க்கிறதே அந்த ஈழம்!
பெற்றவளை மறக்கவில்லை—
பேணி வளர்ப்பவளை மறக்க முடியுமா?
ஒருவனுக்கு ஒருத்திதான் தாய் என்கின்ற
ஊற்றை இலக்கணத்தைக் கிழித்து எறியுங்கள்:
எனக்கு இரண்டு அன்னைகள்
ஈழத்தையும் சேர்த்து எனக்கு இரண்டு அன்னைகள்!

9-2-92

## எனக்கென்று ஒரு செல்வம், இடைவற்றாத வீரச் செல்வம்!

இரவல் பெருமைகளுக்கு நான்
ஏங்கிக் கிடக்க வேண்டியதில்லை;
இல்லாத பெருமைகளை நான்
கற்பனை செய்து கனவு காண வேண்டியதில்லை:

இறந்த காலமும் வீரக் காலம்,
நான் இருக்கின்ற காலமும் அந்தக் காலமே!
சங்ககாலத் தமிழகம் தெரியுமா?—
அதன் தரை எல்லாம் வீரம்!
அதன் தழைகுழை எல்லாம் வீரம்!
தளிர்நீக்கி மேலே வரும் மலர்எல்லாம் வீரம்!
மலர் உதிர்ந்து பிஞ்சு பிடித்தால், அதுவும் வீரம்!
இதற்கு மேலே நான்
காய் கனிகளைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?
காண்பதெல்லாம் வீரம்
கேட்பதெல்லாம் வீரம்
கை கொண்டு தொட்டாலும்
கண் கொண்டு தொட்டாலும்,— எல்லாம் வீரம், வீரம்!
தலைமுறைகள் பலவற்றுக்குப்
போதும் எனது சங்ககாலத் தமிழ்வீரம்!





மறக்க முடியாத அந்த வீரம்
மனத்தகத்தே மகிழ்வு குவிக்கும் போதே,
வந்து சிரிக்கிறது புதுவீரம்—
வாழ்கின்ற ஈழத்தின் தமிழ்த் தனிவீரம்!
படைகொண்டு சென்று
பழிகொண்டு திரும்பியவன் சொல்லுகிறான்:
விடலைப் பையன்களுக்கும் தமிழ்ப் போர்க்களம்
விளையாட்டு அரங்கம் என்று சொல்லுகிறான்!
'எந்த வீட்டிலே
யார் விடுதலை வீரன்
யார் அவன் அல்லன்
என்றே தெரியவில்லை,—திகைத்தேன்' என்கிறான்!
மீண்டும் ஒரு தமிழகம் சங்கத் தமிழகம்
விளங்கித் தோன்றியுள்ளது ஈழத்திலே!

ஈழத்திலே எங்கெங்கும்
மலர்கள் மட்டும் மணப்பதில்லை—
மனங்களும் மணக்கின்றன, வீரமணம்!
ஈழத் தமிழகம் எங்கும்
இளந்தமிழ் வீரம் ஒன்றே
இனிய தமிழ்த் தென்றலாக வீசுகிறது;
பகைவனும் பாராட்டும் பழந்தமிழ்ப் புதுவீரம்!

இரவல் பெருமைகளுக்கு நான்
ஏங்கிக் கிடக்க வேண்டியதில்லை;
இல்லாத பெருமைகளை நான்
கற்பனை செய்து கனவு காண வேண்டியதில்லை!

10-2-92

## தேவையறிந்து நல்கும் என் செந்தமிழ் வளநாடு!

தேவை எல்லாம் கிடைப்பது வளநாடு,
தருணத்துக்கு ஏற்ற
நலமெல்லாம் விளைவதே தாய்நாடு;
இதுதான் நாடு,—என்னுடைய தாய்நாடு!
அது எந்த நாடு என்றால்
அழகியதாம் புகழியதாம் தமிழ்நாடு!

சோறு வேண்டும் என்ற போது
சோழ நாட்டிலே கிடைத்தது;
எங்கள் ஈழநாட்டிலிருந்தும் இறங்கியது!
வீரம் வேண்டும் என்ற போது,
சேர நாட்டிலே மட்டுமல்ல—
திக்குத் திசை எங்கும் அது பொங்கிவந்தது!
ஆற்றல் வேண்டும் என்ற போது,
அறிஞர்கள், புலவர்கள் வடிவிலே,—
அணி அணியாக எழுந்து வந்தது ஆற்றல்!
எங்கள் விறலியரின் கையசைவு காலசைவிலே
இணையற்ற கலை தலை கொண்டு நிமிர்ந்தது!
இன்று எங்களுக்கு எல்லாம் தேவை—
மேலே சொன்ன ஒவ்வொன்றும் தேவைப்படுகிறது!
மித மிஞ்சிய தேவையாக இருப்பது வீரம்;
வீடணர்களையும் எட்டப்பர்களையும்
எட்டி மிதித்துக் குட்டிக் குறைத்து—
எதிரிகளின் தலைமீது கால்வைக்கும் வீரம்!



இது தேவை, இன்றையத் தேவை—
தேவையை உணர்ந்து செழிப்பிக்கும் என்தாயகம்
ஈழத்தின் மூலமாகஅதை எடுத்து நீட்டுகிறது:
அங்கே தோள் என்றால்,
அது வீரத்தோள்,—துப்பாக்கித் தோள்!
அங்கே கால் என்றால்,
நிற்கும் கால்,—நிமிர்ந்து திமிர்ந்து நிற்கும் கால்!
அங்கே பாடம் என்றால்,
அரிவரிப் பாடம் அல்ல,—
இடையிலே பிறந்த ஆண்டவன் பாடமும் அல்ல,—
எல்லாம் எழுச்சிப் பாடம்;
இனத்தின் மானம் காக்கும் எழுச்சிப் பாடம்!

மற்றப் பகுதிகளிலும் நாடுகள் உண்டு—
வயிற்றுத் தேவைக்கு இறக்குமதி செய்யும் நாடுகள்!
என் தமிழ்த் தாய்நாடு
இறக்குமதி செய்து
மானத்தை ஏற்றுமதி செய்யும் மண் அல்ல;
இங்கேயே உற்பத்தி செய்யும் நாடு என் தாய்நாடு!
வீரம் தேவைப்படுகிறது என்று தெரிந்து,—
விளைவிக்கிறது விளைவிக்கிறது
விவேக வீரத்தை மட்டுமே விளைவிக்கிறது!

அன்று சோறு விளைவித்த ஈழநாடு,
எதிரிகளின் மண்டைச் சோற்றில்
இடியாப்பம் பண்ணி அடுக்கிட
இளைய தமிழ் வீரத்தை நட்டு வளர்க்கிறது;
என் தமிழகம் முழுவதுக்குமாக வளர்க்கிறது!

10-2-92

## விலை இல்லாமல் மேன்மை கிடைக்காது!

சாலையிலே சரக்குந்து போனால்
அருகிலே உள்ள வீடு அதிரத்தான் செய்கிறது—
சரக்கு உந்து என்றால் தெரிகிறதா?
லாரி,—நிறையப் பாரம் ஏற்றிய லாரி!
வானத்திலே விமானம் ஏறினால்
பக்கத்திலே நிற்பவர்களின் செவி அடைக்கிறது
அத்தனை இரைச்சலோடு ஏறுகிறது விமானம்!

வீடு இடிந்து விழுந்திடும் என்று சொல்லி
சரக்குந்துப் போக்குவரத்தை நிறுத்தி விட்டீர்களா?
காது செவிடாகிப் போகும் என்று சொல்லி
கத்தல் விமானத்தை நிறுத்தி விட்டீர்களா?
இவைகளால் வரும் பயன் வேண்டும் என்றால்
இவைகளால் வரும் இழப்பை ஏற்கத்தான் வேண்டும்!
ஏனென்றால் இது சேதாரம்;
எழில் பணியிலும் பயன்பணியிலும்
என்றைக்கும் இருந்துவரும் சேதாரம்!

புரிந்து கொண்டான் தமிழன், ஈழத்தமிழன்;
போகின்ற உயிர்கள் புதைகின்ற விதைகள் என்று
புரிந்து கொண்டான் தமிழன், புதிய ஈழத்தமிழன்!
எனவேதான் அவன் சந்திக்கிறான்
தன் எதிரியைப் போர் முனையிலே சந்திக்கிறான்!
வீரம் என்பது துப்பாக்கி வெடிப்பது மட்டுமல்ல
விளைவுகளுக்கு விலை கொடுப்பதும் வீரமே!
விளைவு பெரியதாக இருக்கும் போது
விலையும் கணிசமாக இருக்கும் என்று
விளங்கிக் கொண்டு வாழ்வதுதான் வீரவாழ்க்கை!

**11-2-92**



## காளைக்கு ஏற்றதைக் கையிலே எடுப்பார்கள்

பயிர்த் தொழில் செய்கிறவன் அறிவான்—
அதாவது கமத்தொழில்காரன்:
வேலி தாண்டிப் பயிரில் விழுந்த மாடு
வீசிக் குத்தும் கொம்புமாடாக இருந்தாலும்,
விரட்டி அடித்திட வேண்டும் என்பதை
விவசாயம் பண்ணுகிறவன் நன்றாக அறிவான்!
கொம்புக்குப் பயந்து குடிசையில் ஒடுங்கினால்
விளைவித்த பயிர் வீணாகிப் போகும் என்பதைக்
கமத் தொழில்காரன் நன்றாகவே அறிவான்!

சத்தம் போட்டால் ஓடிவிடும் மாடு என்றால்,
அவன் சத்தத்தோடு நிறுத்துகிறான்;
நாலு கொடுத்தால்தான் போகும் என்றால்
அவன் சாட்டைக் கம்பைக் கையில் எடுக்கிறான்!
முட்ட வரும் மாடு என்றாலோ,
முறுகிய இரண்டு தோள்களை உயர்த்தி
மூக்கணாங் கயிற்றை எட்டிப் பிடிக்கிறான்!

நடப்பதைத்தான் சொல்லுகிறேன்;
தமிழ் ஈழக் கழனியிலே
நடந்து கொண்டு இருப்பதைத்தான் கொல்லுகிறேன்
தன் மாட்டைக் கள்ளமாடாக்கியவன்
நடுத்தெருவிலே கட்டிப் போட்டு விட்டார்களே என்று
சிணுங்குவதில் பொருள் இல்லை;
இங்குள்ள தமிழர்கள் சிலர் போல,
ஏந்தி விட்டார்களே துப்பாக்கியை என்று
இழுப்பு நோய் பரப்புவதிலே பொருளே இல்லை.
விவசாயி அறிந்திருக்கிறான்,—அதாவது கமக்காரன்!

**11-2-92**

## எல்லோரும் மறந்தார்கள்
## ஈழத்தார் நினைத்தார்கள்

எல்லாத் தமிழர்களும் மறந்து போனார்கள்,
ஈழத் தமிழன் நினைத்துக் கொண்டான்;
இழந்து போனவைகளை நினைத்துக் கொண்டான்!
இதுதான் வேறுபாடு—
இங்கைக்கும் அங்கைக்கும் உள்ள வேறுபாடு!

தாய்மொழி ஒருவனின் தலைமைச் செல்வம் என்பதை
எல்லாத் தமிழருந்தான் மறந்து போனார்கள்;
ஈழத்தமிழன் மட்டும் நினைவுகூர்ந்தான்!
தன் இனத்துக்கு ஒரு வாழ்க்கை உண்டு என்பதைத்
தமிழன் எல்லாம் மறந்து போனான்;
ஈழத்தமிழன் மட்டும் அதை எடுத்து நினைந்தான்!
மனித வாழ்வுக்கே ஒரு தகுதி உண்டு என்பதைப்
பல காலமாகத் தமிழர்கள் மறந்து போனார்கள்;
ஈழத்துத் தமிழன் மட்டும்,
'மறக்கக் கூடாதே இதை' என்று மனம் சிவந்தான்!
நினைத்தவன் எதிரே நின்றான் எதிரி—
'எண்ணடா அவன் எலும்பை!' என்று
எழுந்து நிமிர்ந்தான் ஈழத்துத் தமிழன்!

உயிரை மதியாமல் அணிவகுக்கிறான் என்றால்,
ஒவ்வொரு தோளிலும் துவக்கு ஏறுகிறது என்றால்—
தன் அன்னை தந்தையைப் பாட்டன் பூட்டனைத்
தமிழ் ஈழத்தான் சரியாக நினைவுகூர்ந்தான்
மறந்தவன் நினைத்தால் மடிந்து கிடப்பானோ?

11-2-92



## தப்புச் செய்கிறவனைத்
## தண்டிக்க வேண்டாமா?

தெரியாமல்தான் கேட்கிறேன்,—
தெருவிலே எனக்கென்று
ஒரு வீடு கட்டிக் கொள்வது தவறா?...
ஒரு வீடு என்று இருந்தால்
அதற்குச் சுவர் இருக்க வேண்டும்,
மேலே கூரை இருக்க வேண்டும்;
இப்படி ஒரு வீட்டை
எனக்கு நானே கட்டிக்கொள்ளுவது தவறா?
தப்பு என்று சொன்ன துப்பில்லாதவர்களைத்
தட்டிக் கேட்காமல் கிடந்த தமிழர்கள்
ஈழத்திலே எழுந்து கொண்டார்கள்
இரண்டு தோள்களாலும் எழுந்து கொண்டார்கள்!
அவனவன் வீடு அலங்காரமாக இருக்கையில்
என்னுடைய வீட்டுக்கு
நான்கு சுவர்களாவது இருக்கக் கூடாதா! என்ற
ஞாயமான கேள்வியோடு எழுந்து கொண்டார்கள்!
உனக்கு வீரமே கூடாது என்றவர்கள்,
உயர்ந்து நின்ற தமிழ்வீட்டை
இடித்துத் தள்ளியவர்கள்,—
எழுந்து கொண்டார்களே தமிழர்கள் என்கிறார்கள்
ஏந்திவிட்டார்களே துப்பாக்கிகளை என்கிறார்கள்
நியாயந்தானா?
நாடுநாடாகப் பிரிந்திருக்கிறவர்களே, நியாயம்தானா?
தமிழன் கட்டிய தறுகண்மை வீட்டை
இடிக்கப் புறப்பட்ட எறுகாலிகளின்
இரண்டு சோணல் கால்களையும்
ஒடிக்கப் புறப்பட்டது தவறா?
ஒவ்வொரு தமிழனும் உயர்ந்து புறப்பட்டது தவறா?

11-2-92

## தொலைந்து போன இலக்கணத்தைத் துப்பாக்கியால் மீட்கிறான்!

‘வழவழத்த உறவைப் பார்க்கிலும்
வயிரம் பற்றிய பகை நன்று’ என்று
சொன்னவன் தமிழன்—
எப்போதோ வாழ்ந்திருந்ததமிழன்!
தமிழன் என்று சொல்லிக் கொண்டு
பிறகு வந்து பிறந்தவன் எல்லாம்,
அய்ந்துக்கு இரண்டு பழுதில்லை என்கிறான்:
அல்லாட்டத் தள்ளாட்டத்தை நன்னடை என்கிறான்!

உறவாக இருந்தால் உறுதியாக இருக்கவேண்டும்,
பகையாக இருந்தால் வன்மையாக மோதவேண்டும்!
உறவென்று சொல்லுவான்,—
உற்ற சமயம் உதவமாட்டான்!
பகை என்று சொல்லுவான்,
வாள்வீச முனையமாட்டான்!
இப்படிப் பட்டதொரு வாழ்க்கையையே
இதுதான் வாழ்க்கை என்று எவனோ சொன்னால்
ஏற்றுக் கிடப்பானோ தமிழன்?
இரண்டு தோளிலும் துப்பாக்கியை ஏந்தி
வாழ்க்கை இலக்கணத்தையே
வரைந்து காட்ட மாட்டானோ அவன்?

இந்த இலக்கணத்தைத்தான்
எழுதிக் கொண்டு இருக்கிறான் ஈழத் தமிழன்!
போர் முனை என்னும் ஏட்டிலே
புகழ்நடை என்னும் எழுத்தாணியால்
மறந்து போன வாழ்க்கை இலக்கணத்தை
மீட்டெடுத்து வரைகின்றான் எங்கள் ஈழத்தமிழன்!

11-2-92



## இங்கே கொடு வெயில் ஈழத்தில் நறுநிழல்!

விரிந்து படர்ந்த ஆலமரம்
விழுகின்ற வெயிலைத் தாங்குகிறது—
களைத்துப் போனவர்களுக்கு நிழல் தருகிறது!
இது எப்படி இருக்கிறது என்றால்,
அடிமைப் பாதையிலேயே நடந்து நடந்து
அலுத்து இளைத்துப் போன என் தமிழினத்துக்கு
ஈழத்தமிழ்த் தோளின் விரத் துப்பாக்கி
எழுந்து நின்று நிழல்தருவது போல இருக்கிறது!

ஆமாம் தோழர்களே,
இங்கே பிறர்தலைவைகள் எல்லாம்
தென்னை பனையாக நீண்டு விட்டதால்,
வெப்பத்தில் துடித்தது என் தமிழ் இனம்—
விரிந்த கிளைபரப்பி—வீரக்கிளை பரப்பி,
‘வேதனை வேண்டாம் தாயே’ என்று
விரும்பி அழைத்துக் கொண்டது தமிழ்ஈழம்!

தமிழகத்தாரின் பாதுகாப்பை நம்பி
தமிழினத்தை விட்டு வைத்திருந்தால்,
மொட்டை அடித்திருப்பார்கள்—
முழுவதுமாக மொட்டை அடித்திருப்பார்கள்!
இளைப்பும் களைப்பும் நீங்கி
எழுந்திருக்கலாம் என்ற உணர்வையே
இந்த இனத்தின் உணர்விலிருந்து உருவி இருப்பார்கள்
தமிழகத்துத் தென்னை பனைகளுக்குத்
தரம் தெரியவில்லை, ஏன் என்றால்
நிழலின் அருமையே அவைகளுக்குப் புரியவில்லை!

12-2-92

## நான் எழுதுவது
## நடை தேர்ந்த தமிழ்!

எனக்கு எழுதத் தெரிந்த நாள் முதலாகத்
தமிழே எழுதி வந்திருக்கிறேன்,—நல்ல தமிழ்!
தமிழ் என்று சொன்ன உடன்
வெறுஞ் சொற்களை நினைக்க வேண்டாம்:
வீரத்தை விளைப்பது தமிழ்;
அதனோடு விவேகத்தை இணைப்பது தமிழ்!
இரண்டினாலும் ஏற்றம் படைப்பது தமிழ்;
இதுதான் தமிழ்—நான் எழுதி வந்திருக்கிற தமிழ்!
இன்று மட்டும் ஆபாசம் எழுதுவேனோ?
எதை எதையோ உடைந்த தமிழில் எழுதி
என் தமிழையே அசிங்கப்படுத்துவேனோ?
மாட்டேன் தோழர்களே—
வார்த்தையை மண்ணில் புரளவிடமாட்டேன்!
இன்றைக்கும் தமிழ்தான் எழுதுகிறேன்;
என்றைக்கும் அதையேதான் எழுதுவேன்!
என் எழுத்துக்கு வேண்டிய தமிழ்
நேற்று இங்கும் விளைந்திருக்கிறது;
இன்று ஈழத்தில் மட்டும்தான் விளைகிறது!
எடுத்து எடுத்து எழுதுகிறேன்—
இரண்டு இரண்டு எழுந்த தோள்களை,
அந்தத் தோள்களில் அழகு கொஞ்சும் துப்பாக்கிகளை,
அவைகளால் பகைவர்களின் நெஞ்சில்
அழுத்தமாக எழுதப்படும் அச்சங்களை
அடுக்கடுக்காக எழுதுகிறேன்;
ஈழத்தமிழே இன்றையத் தமிழ் என்கிற
இதயத் தெளிவோடு இன்றைக்கும் நான் எழுதுகிறேன்!

12-2-92



## மகிழ்ச்சியின் ஊடே
## ஒரு சிறிய மயக்கம்

ஈழத்திலும் எட்டப்பன்கள் இருப்பான்;
உடன் பிறப்புத் துரோகி
வீடணன் பிறந்த மண் அல்லவா?
ஆனால் தோழர்களே,
அவனைவிட அழுக்கு எட்டப்பன்கள்
ஆயிரம் ஆயிரம்பேர் இங்கே பிறந்திருக்கிறான்!

அவன்களின் தொகை குறைந்திருந்தால்,
அழிவிலே அழியாமை படைக்கின்ற
ஆற்றல் சேர் ஈழப்புலி மறவர்களை
அப்படியும் இப்படியும் பேசுவானா இவன்?
உயிர் கொடுத்து உரிமை காக்கிற
உயர்ந்த இரண்டு வீரத் தோள்களை
உணர்ந்து தெளிய மாட்டாத
உயர்மட்டக் கூனனாக இருப்பானா, இவன்?

ஆனால் எனக்குக் கவலை என்ன தெரியுமா?
அங்கே பிறக்கிற எட்டப்பன்கள்
ஏ.கே. 47க்கு இரையாக்கப் படுகிறான்;
இங்கே பிறக்கிற ஈசல்களுக்கு
என்னென்னவோ பட்டங்கள்;
என்னவோ என்னவோ பட்டயங்கள்!

இதுதான் எனக்குக் கவலையாக இருக்கிறது
நாளை தமிழீழக் கொடி மேலே ஏறும்போது
தமிழ்த் தாயகம் பெற்ற எட்டப்பன்களுக்காக
நான் அல்லவா தலைகுனிந்து நிற்க வேண்டும்?
இதற்காக மட்டுந்தான் வேதனைப்படுகிறேன்!

12-2-92

## தமிழன் கேட்கிறான்
## இந்தியன் பதில் சொல்!

துணியை வெளுக்கப் போட்டால்
கிழிந்து போய்விடும் என்று சொல்லி
அழுக்கையே உடுத்திக் கொண்டு திரிய முடியுமா?
பல்லுக் குச்சியைப் பயன்படுத்தினால்
ஈறு வலிக்கிறது என்பதால்
அன்றாடம் பல் துலக்காமல்
ஊற்றை வாயோடு உலவ முடியுமா?
நடக்கப் பழகுகிற குழந்தை
அடிக்கடி கீழே விழுகிறது என்பதால்
மடியிலேயே அள்ளி வைத்துக் கொண்டு
அதன் நடைகாலையே முடக்கிப் போடலாமா?
எதிரி வலியவனாக இருக்கிறான் என்பதால்,
அவன் பண்ணும் ஏளனங்களையும்
அதைத் தொடர்ந்த கேவலங்களையும்
தட்டிக் கேட்காத நடலைகளாக—
நாங்களும் மனிதர்கள் என்று நடமாடலாமா?
மானத்துக்குக் கேடு ஏற்படுகிறது என்றால்
மதிலே எழுந்து நின்றாலும் இடித்துத் தள்ளாயல்
மடிந்து கிடப்பவன் மனிதனாவானா?
இந்தக் கேள்விகளை எல்லாம்
யார் கேட்கிறார்கள் என்று கேட்கிறீர்களா?
புலிகள் தான் கேட்கிறார்கள்—
புகழ் ஈழ விடுதலைப் புலிகள்!
ஏன் கேட்கிறார்கள் என்றால்
அவர்கள் தமிழர்கள்
அனேக காலம் மானத்தோடு வாழ்ந்த
அந்தப் பரம்பரையிலே வந்த தூய தமிழர்கள்!

12-2-92



## எழுதப் போகிறவன்
## ஏற்றங்களையே எழுது!

கவிதையோ உரைவீச்சோ—
அதைக் கணக்குப் பண்ணியே எழுத வேண்டும்:
நம் வரலாற்றைப் பற்றி எழுத வேண்டும்;
நம் வீரர்களைப் பற்றி எழுதவேண்டும்;
நாம் நாமாக இருக்கிறோமா என்று
சுண்டிப் பார்த்துக் கொள்ளவேண்டும்!

எழுத்தின் இடித்துரைப்புப் பொருள்
எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம் என்பது
எருமைமாட்டு மேலும்
சவாரி செய்யலாம் என்ற சழக்குத்தனமே!
எழுத்து என்பது சாணி அள்ளும் பெட்டியல்ல;
எல்லாவற்றையும் அதில் அள்ளிவிடக் கூடாது!
பெருமைகளை வெடிப்புற வெளிப்படுத்த வேண்டும்;
சிறுமைகளைக் குறிப்பிலே புலப்படுத்த வேண்டும்!

இலைகள் இருக்கத்தான் இருக்கும் என்பதால்
அரும்பே எடுக்காததைப் பூஞ்செடி எனலாமா?
தமிழர்களின் தாழ்நிலை,
அவர்கள் சரிந்துபோன வரலாறு
சொல்லப்படத்தான் வேண்டும்;
சொன்ன அதை மேலேறிக் கொண்டு
சுடர்வீரப் புலிகளைச் சித்திரிக்க வேண்டும்;
அவர்களின் தொடர்வீரத்தை எழுத்தாக்க வேண்டும்!
கவிதையோ உரைவீச்சோ—
அதற்கான கணக்குப்படியே எழுதவேண்டும்!

13-2-92

## சிரிக்கத் தெரிந்தால் நீங்களும் சிரியுங்கள்

புன்னகையும் பூஞ்சிரிப்பும் வேண்டும்,
அது புதிய வீரத்தின் மலர்ச்சியாக இருக்க வேண்டும்!
குழந்தையைக் கொஞ்சி மகிழ வேண்டும்,
கொஞ்சலிலேயே ஒரு வீரம் இழைய வேண்டும்!

புலிக்குட்டிகள்
விளையாடுவதைப் பார்த்திருக்கிறீர்களா?
புல்லுத் தின்னிகளைப் போல
மொசிந்து விழுவதில்லை புலிக்குட்டிகள்;
துள்ளித் தாவி ஏறிப் பிடித்து
புரண்டு எழுந்து முகம் சிரிப்பவை புலிக்குட்டிகள்!
ஏளனச் சிரிப்பு வேண்டாம்—தெரியும்;
எகத்தாளச் சிரிப்பு கூடாது—அறிவீர்கள்;
அசட்டுச் சிரிப்பு
ஆகவே ஆகாது—அறியுங்கள்;
கோழைத்தன இளிப்பு
கூடவே கூடாது; புரிந்து கொள்ளுங்கள்...

தமிழ் ஈழக் காடுகளுக்குள்ளே
தலைமைப் புலிகளும் இளமைப் புலிகளும்
தளதளப்பாகச் சிரிக்கிறார்கள் பாருங்கள்:
தங்கள் துப்பாக்கிகள் சிரிப்பதைக் கேட்டு—
அந்தச் சிரிப்பிலே எதிரிகள் அடிசாய்வதைக் கண்டு,—
வழியும் இரத்தத்தை ஒருகையால் துடைத்துக்கொண்டு
ஈழப்புலிகள் எழுந்து எழுந்து சிரிக்கிறார்களே,
அதுதான் சிரிப்பு,— அப்படிச் சிரிக்கவேண்டும்
அப்படி மட்டுமே சிரிக்கவேண்டும் தமிழர்கள்!

18.2.92



## பிள்ளைத் தாய்ச்சியா, இப்படிப் பெற்றுக்கொள்!

ஈழ வள நாடு
எது எதையோ கண்டிருக்கிறது;
இன்று போர்முனையைக் காண்கிறது!
இதற்கு முன்பு என்றைக்கும்
கண்டறியாத களப்போர் இது:

பள்ளிக் குழந்தைகளாக வந்து போனவர்கள்
சிங்கக் குருளைகளாகச் சினந்து வளருகிறார்கள்!
எதிரியின் ஆட்சிக்கு
இடம் தந்துவிட்ட பெரியவர்களுக்கு,
இப்படியும் குழந்தைகள், இளைய குழந்தைகள்!
மூத்தவர்கள் வளர்த்துக் குவித்த அழுக்கை
மூட்டோடு சாய்க்கும் இந்த இளைய புலிகளை
நினைத்தால் மகிழ்ச்சி—நெஞ்சு கொள்ளாத மகிழ்ச்சி!
அவர்கள் செயல்புரிவதைப் பார்த்து மகிழ
இதயங்கள் வேண்டும், ஓராயிரம் இதயங்கள்!
தன்னை மறந்தான், தாய்தகப்பனை மறந்தான்,
தமிழை நினைத்தான், தமிழ் ஒன்றையே நினைத்தான்!
நினைப்பு நெருப்பாக இருந்ததால்
அதிலே புழுக்கள் பற்றவில்லை, ஆசாபாசப் புழுக்கள்!

நெருப்புச் சுடர்கிறது—
நெஞ்சங்களிலே மட்டுமல்ல
நெடுந்தோளில் ஏந்திய துவக்குகளிலும் சுடர்கிறது!
இவர்களே குழந்தைகள், தமிழின் குழந்தைகள்
எல்லாவீடுகளிலும் பிறக்கவேண்டிய குழந்தைகள்!

18-2-92

## வன் குரல் வேண்டும்
## மென்குரலும் வேண்டும்!

மென்மையான பேச்சுக்குரல்
காதுக்கு இதமாகத்தான் இருக்கிறது!
இதமாக இருக்கிறது என்றால்
இளமைக் காலத்திலே அல்ல—
முதுமைக் காலத்தில்தான் இதமாக இருக்கிறது...
வெடிக்குரல் கேட்டு விம்ம வேண்டிய
இளமைக் காலத்தில் மெல்லிய குரல்
எப்போதோதான் இனித்தது...

ஓர் இனத்தின் வரலாற்றில்
இளமை திரும்புவதில்லை;
இடிவு சரிவு உண்டாகிறது...
இவைகளைக் களைந்து எழுந்திருக்க வேண்டுமானால்
அங்கே இடிக்குரல் கேட்க வேண்டும்;
மக்களே அடித்தொண்டையில் பேச வேண்டும்!
இறுகிப் போன காதுகளைத் திறந்து கொள்ள
இடிக்குரல், வெடிக்குரல்—
இப்படிக் குரல்கள் எழுந்தெழுந்து ஒலிக்க வேண்டும்!

அந்தக் குரல்தான் ஈழத்தில் நிற்கிறது
அயர்ந்து போனவர்களை எழுப்பிவைக்கும் குரல்,
ஆற்றல் மறவர்களை அணிவகுக்கும் குரல்!...
தூர்ந்து போன காதுகளைத் துலக்கம் செய்திட
துவக்குக் குரல்களே சரியான மருந்துவம்!
கண்டறிந்து செய்கிறான் ஈழத்துக் காளை,
கணக்காக விடிகிறது தமிழர்களுக்கு வேளை!
மென்மையான பேச்சுக் குரலும்
சிலபோது காதுக்கு இனிமையாகத்தான் இருக்கிறது.

14-2-92



## ஓசை இனியது
## மழலை மிகமிக இனியது

எங்கிருந்தாவது இனிமை வந்தால்
இதயத்துக்கு இன்பமாகத்தான் இருக்கிறது;
அதுவே என் குழந்தையின் குரலாக இருந்தால்
அகத்திலே புதிய தென்றல் ஒன்று விரிகிறது!...

உலக விடுதலைப் போர்கள்
நெஞ்சுக்கு உவகையையே தருகின்றன;
தமிழ் இனத்தின் விடுதலைக்காக
தமிழ் ஈழம் கொடுக்கின்ற குரலோ
தனியாக இனிக்கிறது,—இனிப்பாக இனிக்கிறது!
எத்தனை சாமியாராகப் போனாலும்
இந்த இன்பத்தை ஒதுக்கிட முடியவில்லை:
ஏன் எனிலோ—
மற்றவை எல்லாம் எட்டக் கேட்கின்ற குரல்கள்;
ஈழத் தமிழ் வெடிக்குரலோ
என் கிட்டக் கேட்கிறது—
என் இதயத்தின் அருகில் கேட்கிறது!

துவக்குகளின் ஓசையிலே
தமிழோசை, பிற ஓசை என்ற
சார்புகள் இல்லை என்றாலும்,—
இடிந்து விழுந்த என் இனத்தை
எழுப்பித் தூக்குகின்ற ஓசை என்பதால்
ஈழத்துத் துப்பாக்கி ஓசை
இனிய தமிழோசையாகவே கேட்கிறது!
விரிகிறது தென்றல் விரிகிறது—
தீந்தமிழ்த் தென்றல் என் சிந்தையிலே விரிகிறது!

14-2-92

## இங்கே தேடியது
## ஈழத்திலே கிடைத்தது

புறவாழ்க்கையிலே
இன்று புதைந்து போன தமிழன்,—
அகப்பாடல்களிலே கூட
வீர வரலாறுகளைப் பதித்து
மேன்மையாகக் காதல் நடத்தியவன்;
நற்றிணைகளை, குறுந்தொகைகளை,
அகநானூறுகளைப் படித்துப் பாருங்கள்—
இரண்டு வாய்கள், வாய் மலர்கள்
இன்பத்துப் பாலில் ஈடுபட்டு இருக்கும் போதும்,
அந்த ஒருவன் இடையிலே உடைவாள் இருந்தது—
உயர்தமிழ் வீரத்தைத் தோளிலே வைத்திருந்தான்!
அந்தக் கல்யாணர்களைப் பார்க்க
ஆசை வந்தபோது
இந்தத் தமிழகத்திலே கிடைக்கவில்லை—
ஈழத் தமிழகத்திலே அந்தக் காட்சி கிடைத்தது!
போர்க்களத்திலே நிற்கும் புலி இளைஞன் மட்டுமல்ல,
யாழ்ப்பாண வீட்டிலே படுத்திருக்கும்
இளைய கல்யாணர்கள் கூட
துப்பாக்கி நினைவோடு படுத்திருக்கிறார்கள்—
தோட்டாக்களின் நினைவோடு எழுந்திருக்கிறார்கள்!
மெல்லிய முல்லைக் கொடியால் பொதியப்பட்டாலும்
வேங்கை மரம் வேங்கை மரம்தானே?
இந்த விதிமுறையை மீட்டெடுத்தவன்
இன்றைக்கு ஈழத்தமிழன் தானே?
எனவே அத்திசை ஈழத் தமிழ்த் திசை
இதயத்தை நிமிர்த்தும் ஏற்றத் திசையாக விரிகிறது!

14-2-92



## ஈழப் புதுநிலத்தை
## யானும் பார்க்க வேண்டும்

போகாத இடமல்ல—
போய்ப் புழங்காத இடமும் அல்ல தமிழ்ஈழம்!
'இன்னமும் போகவேண்டும்—
அந்த மண்ணிலே இறங்கவேண்டும்' என்று
ஆசைப்படுகிறது உள்ளம்;
அன்றாடம் ஆசைப்படுகிறது என் தமிழ் உள்ளம்!

வாயிலே வீரத்தோடு
பல பேர் நடமாடிய காலத்தில்
ஈழத்துக்குப் போய் இருக்கிறேன்:
இங்கு இருப்பவனை விட அங்கு இருப்பவன்
தெளிவுடையவனாக இருந்ததை
நேரிலேயே கண்டு மகிழ்ந்திருக்கிறேன்!
அப்போது கூட எனக்கு
இந்த ஆசை ஏற்படவில்லை;
ஏன் என்று கேட்டால்,—
ஈழத்தான் எடுத்து முழக்கிடும் வரை
போர்க்களம் எப்படி இருக்கும் என்பது
புரிந்தும் புரியாமலும்தான் இருந்தது—
புத்தகத்திலே மட்டும் படித்ததுதானே அது?

எட்டாண்டுக் காலம் இரணகளம் நடந்து
ஈழத் தமிழகமே புது நிலம் ஆகியுள்ளது;
அந்த நிலத்தைப் பார்க்க வேண்டாமா?
அன்றாடம் அதில் விளையும்
அழகுப் பயிர்களைப் பார்க்க வேண்டாமா?
எனவே ஆசைப்படுகிறேன்—
இன்னும் ஒருமுறை ஈழம் செல்ல ஆசைப்படுகிறேன்!

14-2-92

## வாழ்வில் கிடைக்கும் சந்தையில் கிடைக்காது

முக்கனிகள் தந்த தமிழகத்திலே
நாலாவது கனி ஒன்று கிடைக்கிறது,
தமிழ் வீரம் என்ற நறுங்கனி!...

என்ன திருதிரு விழிக்கிறீர்கள்?
சந்தையிலே வரவில்லையே என்று
மருள மருள விழிக்கிறீர்களோ?
நாலாவது கனி கிடைப்பது
இந்தியத் தமிழகத்திலே அல்ல,
ஈழத் தமிழகத்திலே பெரிது பெரிதாகக் கிடைக்கிறது!

முக்கனிகளோடு சேர்த்து
நறுங்கனிகள் பலவற்றை
நயமாக உண்டிருந்த தமிழன்,
இதயக் கனிகளை இழந்து போனான்;
வாய்க்கும் வயிற்றுக்கும் மட்டுமே
பழங்கள் தேடிக் களைத்துப் போனான்!
வீர மரத்தை வெட்டித் தள்ளி
வேருக்குக் கூட வெந்நீர் ஊற்றும்
எட்டப்ப வீடணர்கள் பெருகிப் போனதால்
வீரக் கனி இங்கே அருகிப் போனது!

விளையாட்டாக எடுத்துச் சென்று
பூதந் தேவன் புதைத்த தமிழ் விதை
ஈழத்து மண்ணில் மரமாய் எழுந்தது
இணையற்ற உயர் வீரம் பழமாய்க் கனிந்தது!

என்ன விழிக்கிறீர்கள், இங்குள்ள தமிழர்கள்?
சந்தையிலே தேடித் தேடிச் சலித்துப் போனீர்களோ?

14-8.93



## தன்மானம் உள்ளவன் பதில் சொல்!

'நான் தவழ்ந்து விளையாடிய நிலம் மட்டுமல்ல,
நான் மலசலம் கழித்த மண்ணும் இது—
அதாவது, என் உரிமை உடைமைத் தாயகம்!

இந்த நிலத்திலே
என் பின்னவர்கள் நடக்கலாம்—
எதிரிகளின் கால்கள் படவே கூடாது—
பட்டால் இரண்டையும் படக்கென்று ஒடிப்பேன்!
இங்கே வாலை நீட்டச் சொல்லும்
அகம்பாவ மூளை அவனுக்கு இருந்தால்,
அடித்து நொறுக்கி அதைச் சிதறடிப்பேன்!
மாற்றான் கால்பட்ட மண் என்ற
மாசு என் மண்ணின் மீது படிவதாய் இருந்தால்
மடிவதற்குத் தயாராக இருக்கிறேன் அதற்கு முன்னே!'

இப்படிச் சொன்னான் ஈழத்தமிழன்;
எல்லா உலகத்தின் முன்னேயும்
எழுந்து நின்று இப்படிச் சொன்னான்!

'தவறு என்று சொல்லிடத்
தைரியம் உண்டா எவனுக்காவது?
தன்மானம் உண்டா அத்தகையவனுக்கு?'—
இப்படிக் கேட்பவன் நான்—
ஈழத் தமிழ்ப் புலிகளின் மூத்தவனாக
இங்கே தமிழகத்திலே இருக்கின்ற ஒரு தமிழன்!

14-2-92

## வீரம் விளைப்பவன்
## யாருக்காகக் காத்திருப்பான்?

வீரம் விளைவிக்கப் புறப்பட்டவன்
யாருக்காகவும் காத்திருக்க மாட்டான்;
எங்கே எப்படி என்று
யாரையும் அவன் கேட்கவும் மாட்டான்!

சூரியன் வெயிலடிப்பதற்கு யாரைக் கேட்கிறான்?
தமிழரின் தென்பொதிகை
தென்றலை எழுப்புவதற்கு யாரைக் கேட்கிறது?
கூடிக் குவிந்த கருமேகம்
கொட்டித் தீர்க்கட்டுமா என்று யாரைக் கேட்கிறது?

எதிரி ஒருவன் துள்ளிக் குதிக்கும் போது,
'இதோ நான்,— என் இரண்டு தோள்கள்!' என்று
எதிரூன்றி நிற்பது வீரம்;
இரண்டு தலைகளில் ஒன்று
உருளப் போகிறது என்று கட்டியம் கூறுவது வீரம்!
ஈழத்துத் தமிழனுக்குத் தெரிகிறது—
இது இந்தியத் தமிழனுக்குத் தெரியவில்லை;

வீட்டுக்குள்ளே எதிரி புகுந்துவிட்ட பின்னும்
குறட்டை விடுகிறான் இந்தியத் தமிழன்;
தனது குலமானத்தையே இவன் கோட்டைவிடுகிறான்!
வீதியிலே ஒருவன் வேகமாகக் கால்மிதித்ததும்
'விடாதே, பிடி அவனை!' என்று
தோள்தட்டி எழுகிறான் ஈழத்தமிழன்;
ஏனென்றால் இது வீரம்,—இப்படி எழுவதே வீரம்!

15-2-93



## நல்லவன் ஒருவனை
## நடையே காட்டுகிறது!

நல்ல மனிதன் என்பதை
ஒருவனின் நடையே காட்டிவிடுகிறது!
வாய்ச் சொல் காட்டும் என்றான் வள்ளுவன்—
வேண்டியதில்லை,— கேட்க வேண்டியதில்லை;
வாய்ச் சொல்லைக் கேட்க வேண்டியதே இல்லை!
நான் பேசிக் கொண்டு இருப்பது
வீட்டுக்கு மட்டும் நல்லவனைப் பற்றியல்ல—
வீதிக்கு மட்டும் நல்லவனைப் பற்றியல்ல—
இனத்துக்கே நல்லவனைப் பற்றி நான் பேசுகிறேன்!
தமிழ் இனத்துக்கு நல்லவர்கள் தேவைப்பட்டபோது,
யார் யார் என்று என்று
இங்கே நான் தேடிக் கொண்டு இருந்தேன்;
இருந்த அய்ந்து கோடியையும்
எழுத்தெண்ணித் தேடிப் பார்த்தேன்...
எதிரே வந்தவனை நிறுத்தி வைத்து,
"யார் நீ, தமிழனா?" என்றேன்;
"இல்லை இல்லை, காங்கிரசுக்காரன்" என்றான்!
"நீ?" என்று அடுத்தவனைக் கேட்டேன்;
"தமிழன்தான்,— இப்போது திராவிடன்" என்றான்!
உச்சிக்குடுமி தெரிந்தது,
உடம்பிலே பூணூலும் தெரிந்தது
அவனைக் கேட்க வேண்டியதே இருக்கவில்லை!
மலைத்து நான் விழித்த போது
மடமட என்று கேட்டது போர்நடை;
வந்தான் நல்லவன் என்று நிமிர்ந்து பார்த்தேன்—
அங்கே நின்றவன் ஈழத்தின் இளைய தமிழன்!

15.2.92

## அடிமைச் சுவரை
## அடியோடு இடித்தான்!

உடைத்து எறிய வேண்டும்,—
உரிமைக்குத் தடை எழுந்தால்
அந்தச் சுவரை உடைத்து எறியவேண்டும்!
மொழியின் பேரால் எழுந்தாலும்
இனத்தின் பேரால் எழுந்தாலும்
அது தடை—அது உடைக்கப்பட வேண்டும்!

உலகமெல்லாம் உணர்ந்திருக்கிற இந்த உண்மையை,
'உயர்த்திப் பேசுகிற இந்த உண்மையை,
இழுத்துக் கீழே தள்ளி
அதன்மேல் ஏறிநின்றது சிங்கள இனவாதம்;
அந்த வாதத்தைக் காதைப் பிடித்து முறுக்கி
நேருக்குக் கொண்டுவா என்று அனுப்பிவைத்தால்
கீழே கிடந்தவனையே ஏறி மிதித்தது இந்தியா—
கிறுக்குத்தனத்தை அங்கேயும் போய் நடத்தியது!
அங்கே இருந்தவன்
எருமைத் தமிழன் அல்ல, காளைத் தமிழன்;
தனக்கு இரண்டு கொம்புகள் இருப்பதை
எப்போதும் நினைவில் வைத்திருக்கிற இளையதமிழன்!
அவனைச் சீண்டி அழுக்குப்பட்டது சிங்களம்;
அவனையே சீண்டி இழுக்குப்பட்டது இந்தியம்!

உங்களுக்குப் புரியும் என்று நினைக்கிறேன்—
உரிமைக்குத் தடை எழுந்தால்
உடனேயே அது இடித்துத் தள்ளப்படவேண்டும்!

**16-2-92**



## அது புதைந்தது
## இது உடைந்தது!

அரைமணி நேரம் சத்தம் போட்டால்
'அம்மா, அப்பா' என்று மூச்சு வாங்குகிறான்,
இவன் தமிழன்,— இந்தியத் தமிழன்!...
இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே,—
ஏழாயிரம் எட்டாயிரம் ஆண்டுகளாக
இருந்துவந்த தன் வரலாற்றை
ஒரே ஒரு வயிற்றுக்காகவும்
பார்க்க முடியாத முதுகுக்காகவும்
இழந்து விட்டு 'இந்தியன்' ஆனவன் இவன்!
இந்தச் சின்னவனையும் ஏந்தித் தாங்கி,
'அண்ணனுக்குத் தம்பி அல்லவென்று போகுமா?'
என்று இதயம் நெகிழக் கேட்டு
உறவு தொடுத்தவன் ஒருவன்—ஈழத் தமிழன்!
அவன் போர்க்களத்திலேயே நிற்கிறான்—
ஆண்டாண்டுக் காலமாக அங்கேயே நிற்கிறான்!
குண்டு மழையில் குளிக்கிறான்
குருதி ஆடையையே உடுத்துகிறான்;—
நாட்கள் வாரங்கள் மாதங்கள் அல்ல,
ஆண்டுகள் ஆண்டுகளாக அங்கேயே நிற்கிறான்!
இளைத்தேன் என்று இருமவில்லை—
களைத்தேன் என்று கண்பிதுங்கவில்லை—
முளைத்து முளைத்து முன்னே செல்லுகிறான்
காரணம் என்ன? கணித்துக் கொள்ளுங்கள்:
ஈழத்தவன் பழவிதையின் புதிய நாற்று;
இவன்,—இந்தியத் தமிழன்,
இடிபாடுகளில் உடைந்த சில்லு!
அவனையும் இவனையும் அடையாளம்காணுங்கள்!

**16-2-92**

## எழுந்தனர் இளையவர்கள் எதிரிகள் எங்கும் இல்லை!

'எனக்கு வீரம் வேண்டும்
எங்கிருந்து வந்தாலும் அது வேண்டும்!
எதிரியின் வீரத்தையே
இரண்டு கைதட்டிப் பாராட்டிய
இராவணனின் வழிவந்தவன் அல்லவா நான்!
எனக்கு வீரம் வேண்டும்
எங்கிருந்து வந்தாலும் வீரம் வேண்டும்!'

இப்படி இப்படி நினைத்திருந்த எனக்கு
என் தம்பிகளிடமிருந்தே அது கிடைத்தது—
ஈழத்து விடுதலைப் புலித் தம்பிகள்!...
ஊரெல்லாம் தேடி அலைந்த ஒரு பொருள்
உட்கார்ந்திருந்த இடத்திலேயே
ஓரத்தில் இருந்திருக்கிறது என்றால்
எப்படி இருக்கும்—எனக்கு எப்படி இருக்கும்!
இதயம் ஒளிர்ந்தேன்—
இரண்டு தோள்களும் நிமிர்ந்தேன்!

ஈடில்லா வீரத்தை மட்டுமல்ல,
ஏ. கே. நாற்பத்தேழையும்
உலகத்துக்கே உயர்த்திக் காட்டியவன் ஈழமறவன்!
அவன் என் தம்பி என்று நினைக்கும்போது
ஆயிரமாய்க் கிளைக்கிறது மகிழ்ச்சி,
ஆயிரமாயிரமாய் எழுகிறது இதயப் பெருமிதம்!
தம்பி உடையான் படைக்கு அஞ்சான் என்பார்கள்
இந்தத் தம்பிகளைப் பெற்ற என்முன்
எதிரிகளே இல்லை—
ஆமாம், எதிரிப்படையில் ஒரே ஒருவன் கூட இல்லை!

16-2-4



## மகிழ்ச்சியைத் தந்து பாராட்டைப் பெற்றான்!

பட்டுப்போன நெடுமரத்தின்
வறண்டு போகாத பட்டைப் பகுதியில்
படீரென்று எழுந்த பசிய கிளைபோல
ஈழத்திலே எழுந்தது தமிழ் வீரம்,
என் பாரம்பரியத்தின் புதிய வடிவம்!

'போற்றுகிறாரே இவர் ஈழப் புலிகளை' என்று
முகம் சிணுங்குகிறான் இங்கே உள்ளவன்...
இவனுக்குத் தெரியாது—
அதனுடைய அருமை இவனுக்குத் தெரியாது;—
இழந்துவிட்ட பெரும் பொருள்
இரண்டு மடங்கு வட்டியுடன்
இதோ வந்தேன் என்று வந்து நிற்கும் போது
ஏற்படுகின்ற மகிழ்ச்சி தெரியாது—
இங்கே உள்ளவனுக்குத் தெரியவே தெரியாது!

ஏன் என்றால்,—இவன்
நெடும் பலகாலம் புரிந்து கொண்டதில்லை:
குடும்பத்தையும் புரிந்து கொண்டதில்லை;
குலப் பெருமையையும் புரிந்து கொண்டதில்லை!
இருந்தது செல்வம் என்கின்ற
எண்ணத்தையே மறந்து போனவன் இந்த இழப்பன்!

நான் மறவன் மகன் மறவன்—
ஏனென்றால் நான் தமிழன் மகன் தமிழன் என்று
எண்ணிக் கிடந்ததால் எழுந்தான்
ஈழத்துத் தமிழன் இடியேறாக எழுந்தான்!
எனவே அவன் பெற்றான்—
என் இதய மகிழ்வுகளை எல்லாம் அவன் பெற்றான்!

17-2-92

# இங்கே மறந்தது
# அங்கே நினைவுவந்தது

தமிழன் புறத்திணையியல் படைத்தவன்—
புறமுதுகிடாத வாழ்வுக்கு இலக்கணம்!...
தமிழன் புறநானூறு படைத்தவன்—
புகழ் குவிக்கும் வீர வாழ்வுக்கு இலக்கணம்!...
தமிழன் பதிற்றுப்பத்துப் படைத்தவன்—
தளராத இரண்டு தோள்களின் வரைபடம்!...

இவைகளைப் படைத்த தமிழன்
நீதி நூலும் படைத்தான்—வள்ளுவம்;
ஒழுக்கங்களின் உயர்பீடம்!
இவை வரலாற்றிலே நிகழ்ந்தவை;
என்னுடையவை என்று சொல்லி
எல்லாத் தமிழனும் பெருமைப்படத் தக்கவை!

வரலாற்றைச் சற்றே மறந்துவிட்டு
வாழ்வியலைக் கொஞ்சம் பாருங்கள்—
அந்தத் தமிழனின் வழிவந்தவன் என்கிற
இன்றையத் தமிழன் வாழ்விலே என்ன இருக்கிறது!
இவன் பொய் சொல்லுகிறானோ இல்லையோ,
யாராவது சொல்லிவிட்டால் முகம் சிணுங்குகிறான்!
இவன் கள்ளுக் குடிக்கிறானோ இல்லையோ,
யாராவது குடித்திருந்தால் சாம்பிப் போகிறான்!
இவன் காமக்கடை வைக்கிறானோ இல்லையோ
யாராவது நடத்தினால் கண்கலங்கிப் போகிறான்!





வள்ளுவர் சொன்னதற்கோ அல்லது இயல்பாகவோ
ஒழுக்கத்தில் இத்தனை ஆழம் புதைந்த தமிழன்,
உரிமையில் கை வைக்கப்படும் போது
உணரவே இல்லை— சொரணையே இல்லை—!
இந்த வாழ்க்கையை, இன்றைய வாழ்க்கையை
எண்ணி எண்ணி நான் இடிந்து கிடந்த போது,
வெட்டிப் பாய்ந்தது மின்னல், ஈழமின்னல்!
எடடா காலை, என் மண்ணில் வைத்த காலை! என்று
என் இளையவன் கொதித்த
அதட்டல் குரல் அகத்திலே பாய்ந்தது!
வடக்கிலிருந்து வருகிற ஒவ்வொரு காலுக்கும்
மாலை மரியாதை செய்து வணக்கம் செலுத்துகிற
காங்கிரஸ் தமிழன்களும் திராவிடத் தமிழன்களும்
கனவிலே கூட எழுப்பியிராத குரல்!...
ஏறிப் பாய்ந்தது ஈழத் தமிழ்க்குரல்—
இளைய இளைய புலிக்குருளைகளின் குரல்!

இங்கு வளர்ந்து கிடந்த இருட்டுக்குள்ளே
நான் படிக்க முடியாமல் போன
நல்ல ஏடுகள் தாள் தாளாக விரிந்தன!
புறநானூற்றுக்குப் புது எழுத்துக் கிடைத்தது,
பதிற்றுப்பத்துக்கு மறுபதிப்பு வந்தது,
வரலாற்று இயலே வாழ்வியலாகச் சிரித்தது!

என் தோள்களைத் தொட்டுப் பார்த்தேன்,
நேற்று இருந்த தோள்களல்ல—
நிமிர்ந்து எழுந்த புதிய தோள்கள் இவை!
மறக்கவில்லை—தமிழன் மறக்க வில்லை
மறத்தமிழ் வரலாற்றை மறந்திடவே இல்லை!

17-2-92

## இளமை வேண்டும்
## இன்னொரு நாள் வேண்டும்!

வயது போன இந்த வயதிலே
இழந்து போனேனே இளமையை என்று
ஏங்கவில்லை நான்,—ஏங்கவே இல்லை!
ஆனாலும் ஒரு ஆசை, சிறிய ஆசை—
அந்த நாளில் நான் நடத்தியதை விட
ஆயிரம் வீரங்கள் நடத்துகின்ற
ஈழத் தமிழ்ப் புலிகளில் ஒருவனாக
இருதோள் நிமிர்ந்து எழுந்திட ஆசை!
இங்கே பலபேரிடம் இல்லாத வீரம்—
என் நெஞ்சில் மலையாக எழுந்து நிற்கும் வீரம்—
துப்பாக்கி வழியாக வெடித்திட வேண்டாமா?
அந்த ஏ. கே. 47 கள்
என் தோள்களிலும் இருந்திட வேண்டாமா?
மூச்சிலே வீரம் பேச்சிலே வீரம்
முற்றிய என் எழுத்துக்களிலும் வீரங்கள்;
இந்த வீரங்களை நான் ஏந்திக் காட்டிட
இன்னொரு இளமை எனக்கு வேண்டும்;
ஈழத் தமிழ்ப் புலிகளின் இளமை!

ஆகா, எத்தனை மகிழ்ச்சி, எத்தனை இனிமை!
அன்னை தந்தையின் சொந்த இனத்துக்கு
ஆபத்து வரும் போது தடுத்து நிறுத்திட
ஆருயிர் தன்னையே பணயம் வைத்திடும்
அந்த இளமையில் எத்தனை இனிமை!

அந்த இன்பத்தை அள்ளி மகிழ்ந்திட
ஆசைப்படுகிறேன்:
ஒரே ஒருநாள் இளைஞனாய் நின்றிட
இன்றைக்கும் என்றைக்கும் நான் ஆசைப்படுகிறேன்!

18-2-92



## விடுதலைப் புலிகளும்
## உறங்குவது உண்டு!

துப்பாக்கி வெடிக்கும் சத்தத்திலே
தூங்காமல் தூங்குகிறான் ஈழத் தமிழன்;
துறை துறையாகப் பிரிந்த தமிழ் வீரத்தை
முறை முறையாக நடத்தும் முனைப்புக் குன்றாமல்
தூங்குவது போலத் தூங்குகிறான் ஈழத் தமிழன்!

அவனுடைய துயில் அறிதுயில் அல்ல—
அத்தனை தமிழர்களுக்காகவும் மூச்சுவிடும்
அறநெறிப் புதுத்துயில் அது!
அதுதானே தமிழரின் மானத்தையே காக்கிறது!
தமிழ் ஈழ மண்ணின் மேல் வட்டமிடும் விமானம்
சடசட என்று எரிந்து சரிகிறது—
தமிழன் உறங்கிவிட்டான் என்ற
தப்புக் கணக்குக்குக் கிடைத்த பரிசு அது!

இந்தத் தமிழனின் அப்பன் ஆயிகள்
கண்ணுறங்காது காத்த இந்த இளைய தமிழன்
கமத் தொழிலிலேயே களத்தொழில் கற்றவன்;
கண்ணை மூடினாலும் உறங்காமல் கிடப்பவன்!
எதிரி என்று கேட்டதும்இரண்டு கண்ணும் சிவப்பவன்
தமிழர் உரிமை என்ற மாளிகைக்குத்
தலைவாசல் அமைத்த மலைபோன்ற தோள்க்காரன்!
போர்க்களம் நோக்கி நடத்தாத தந்தைக்கும்
புகழ்நன்றி செலுத்தும் புதிய மகன் இவன்!
காலை வாரக் காத்திருக்கும் இந்தியத் தமிழனுக்கும்
ஏற்றம் குவிக்கவே எழுந்த இளைய வீரன் இவன்!

துப்பாக்கிச் சத்தத்திலே உறங்குகிறான்
துயில் அல்லாத துயிலிலே இந்தப் புலி உறங்குகிறான்!

18-2-92

## இதய வானத்தில் இளையதோர் உதயம்

என் இதயம் வானம் போல விரிந்தது;
அது நிறைய இன்பம் வேண்டும் என்று
ஆரொருவரிடமும் நான் கேட்கவில்லை!
அந்த வானம் முழுவதையும் அழகுபடுத்த
சிறிய தொரு உதயம் போதும்—
சீறிச் சிரித்தெழும் கதிரவன் உதயம்!
இந்த ஒன்றைத்தான் என்றென்றும் கேட்கிறேன்;
என்னைச் சேர்ந்தவர் எல்லோரிடமும் கேட்கிறேன்.
அந்த உதயத்திலே தமிழ் இருக்கும்,
ஆர்த்தெழுந்து சீர்குவிக்கும் வீரம் இருக்கும்,
ஆதலினால் என் இதய வானத்தை
அழகு படுத்துங்கள் என்றே கேட்கிறேன்...
கேட்டுக் கேட்டுக் கிறங்கிப் போனபின்,—
கேட்டது கிடைக்காமல் இருண்டு போனபின்,—
கிளர்ந்தது எழுந்தது ஒரு புது உதயம்;
கிழக்கை அளாவிய தெற்குத் திசையிலே
கிண்கிண் கிணிரெனப் புலர்ந்த உதயம்!
மடங்கா நடைகொண்ட புலித்தமிழ் வீரம்,
இந்த இதயத்தின் இருட்டைப் போக்கியது
எந்த இதயத்துக்கும் ஒளியையே பாய்ச்சியது!
சாம்பிக் கிடந்து கூம்பிய இதயம்
தளிர் தளிர் தளிர் என மறுதளிர் எடுக்கவே
தலையின் பரப்பெல்லாம் ஒரு புதுக் குதூகலம்!
கேட்டது கிடைத்தது கிழக்கிலிருந்து;
விரிந்த இதயமும் ஒளிகொண்டு சிரித்தது!
உதயத்தை எதிர்த்திட உலகத்தில் ஏது இருள்?...

18-?



## இங்குள்ள தமிழுக்கு ஈழத்தில் விழுதுவேர்கள்!

விழுது வேர்கள், வீர வேர்கள்!...
ஆலமரத்தின் விழுதுகளைத்தான் சொல்லுகிறேன்
அழகாக ஊன்றிக் கொண்டபின்
அவைகளைப் பார்த்த யாருமே சொல்லுவார்கள்,
'விழுதுவேர்கள் வீரவேர்கள்!'...

மரக்கிளையில் புறப்பட்டு
மண்ணை நோக்கி அவை வளருகின்ற காலத்தில்
புல்லுலக்குவோர் அதை ஒடிப்பார்கள்;
பாசமிகு இளைய நண்பர்கள்
பற்றிப் பிடித்து ஊஞ்சலாடுவார்கள்!
இன்பம் கொழிக்கும் இந்த விழுதுகள்
மண்ணில் ஊன்றி வலுப் பெற்ற பின்னே

வழங்கும் காட்சியே வேறு வாழ்க்கையே வேறு!
எங்கள் தமிழ்ப் போரல மரத்தின்
ஈழத்து விழுது வேர்களைப் பார்த்தீர்களா?
அடிமரமே இற்றுப் போனாலும்
ஆலமரமாக ஊன்றிக் கொண்டன விழுதுகள்—
அழகிய வலிய ஈழத்து விழுதுகள்!
தமிழ் இனம் என்கின்ற ஆலமரம்
அடிசெத்தாலும் கிளை சாயாது என்பதை
ஆணிவேராக உறுதி செய்தன ஈழத்து வேர்கள்!

எனவே புரிந்து கொள்ளுங்கள்—
எந்த இனமாவது ஆலமரமாக வளர்ந்தால்
அந்த இனத்துக்கு ஆயிரம் விழுதுகள் இருப்பதால்
ஆராலும் அதை வீழ்த்தவே முடியாது!

19-2-92

## தமிழ்க்காது இல்லை
## வீரக்குரல் கேட்கவில்லை!

புரட்சிக் கவிஞன் பாடிய பாடல்—
புன்மைகளைப் பொசுக்குகின்ற நெருப்புப்பாடல்—
கடல் தாண்டிக் கேட்கிறது—
கம்பி வேலி தாண்டிக் கேட்கவில்லை!

காது உள்ளவன் கடலுக்கு அப்பால் இருக்கிறான்,
அது இல்லாதவன், அருகிலே பலபேர் இருக்கிறான்!
தாயகத்துத் தமிழன் ஒவ்வொருவனும்
தமிழ்க் காதுகளைக் கழற்றி வைத்துவிட்டு
அயல் காதுகள் பொருத்திக் கொண்டானோ?
இல்லையாம் எனில்,—
இங்கே கேட்டிருக்க வேண்டிய வீரப்பாட்டு
இங்கே கேளாமல் ஈழத்திலே கேட்டது என்ன?
'வீரங்கொள் கூட்டம்' என்றான் கவிஞன்;
'ஆமாம் தமிழ்க் கூட்டம்' என்கிறது ஈழம்!
'பகைவரை நொறுக்கினர்' என்றான் கவிஞன்;
'பாருங்கள், இதோ முடித்துவிட்டோம்' என்கிறது ஈழம்!
எந்தக் குரலும் முதலில் அருகிலே கேட்கும்;
எங்கள் கவிஞனின் இடிக்குரல் மட்டும்
இங்கே கேட்காமல் அங்கே கேட்டது என்ன?
என்றால்
தாயகத்துத் தமிழனின் காது தூர்ந்துபோய் விட்டது;
ஈழத்துத் தமிழனின் எழிற்காது திறந்தே இருக்கிறது!
தமிழகம் வாழ வேண்டுமானால்
செவிட்டுக்கு வயித்தியம் சீக்கிரமே பாருங்கள்!

19-2-92



## செத்துப் போன மரத்திலே
## கொத்து மலர்கள் சிரிக்குமா?

இங்கே நின்று கொண்டு எட்டிப்பார்க்கிறேன்;
அங்கே நடப்பதை அளக்கவே முடியவில்லை!
ஈழத்தில் நடக்கின்ற என் தமிழ் வீரம்
எந்தக் கணக்கிலும் அடங்குவதாக இல்லை!

அங்கே இருப்பவனும் தமிழன்தானே?
ஆங்கிலம் எல்லாம் படித்தவன்தானே?
அந்நிய மோகத்தில் விழுந்தவன் தானே?
எப்படி எழுந்தான்?—
ஈழத் தமிழன் எப்படி எழுந்தான்?
இரண்டு தோளும் இரும்புத் தோள்களாய்
இதயம் ஒன்றும் வயிர இதயமாய்
எப்படி எழுந்தான் ஈழத்தமிழன்?
இங்கைத் தமிழனின் சொந்தத் தமிழனுக்கு,
இப்படி நிமிர்ந்திடும் எழுச்சி எப்படி வந்தது?
எப்படி எப்படி, எப்படி, எப்படி?...

வேல், வாள் ஈட்டியோடு விளையாடிய தமிழன்
வெளுத்துப் போனான், இளைத்துப் போனான்!
வீரம் இவனுக்கு வருமோ என்று
விவேகமுடையோரும் அய்யுற்ற நாளில்
வெடித்தது வீரம், வேகமான வீரம்—
இங்கே அல்ல, அங்கே வெடித்தது!
ஈழம் என்னும் சிறிய கொம்பிலே
ஏற்றமிகு வீரப் பூ ஒன்று சிரித்தது!
எப்படி எழுந்தான் ஈழத் தமிழன்—
இதுதான் எனக்குப் புரியவே இல்லை!...

19-2-92

## தமிழ் வகுப்பில் தலைமாணாக்கர்கள்!

மாணவர்களைக் க‍ ... திருக்கிறேன்;
மலர்முகத் தொகு
எவருக்குத்தான் ... !
என்றாலும் இன்ட
இரட்டைப் பூப் பூக் ... ன் இதயம்—
இதயத்தின் மகிழ்ச்சியை ஏந்தி ஏந்திப் பூக்கிறது!
ஓய்வு பெற்ற பிறகும்
எனக்கு மாணவர்கள் கிடைத்திருக்கிறார்கள்;
ஈழத்து மண்ணிலே அவர்கள் முளைத்திருக்கிறார்கள்!
கணக்காயன் சீனிக்குக்
கண்நிறையக் கிடைத்த மாணவர்களைப்போல்
எனக்கும் அந்த ஈழத்தில் கிடைத்திருக்கிறார்கள்!
இளைய மாணவர்கள், எழுந்த மாணவர்கள்,
இவர்களோடு இணைந்த மாணவிச் செல்விகள்!
இத்தனை ஆயிரம் பேர்களை நான்
இதுவரை வகுப்பிலே பார்த்ததே இல்லை;
இன்றைக்குப் பார்க்கிறேன் ஈழத்தமிழ் வகுப்பிலே!
அத்தனை பேரும் தலைமாணாக்கர்கள்;
ஆசான் சொன்ன அப்படியே நடந்து
தேசத்தின் ஒளியை எடுத்து ஏந்துபவர்கள்!
விளையாட்டாக வீரம் விளைக்கும்
வித்தக வீர மாணவப் படையணி
ஈழத்தில் பிறக்கிறது;—இதயத்தில் நடக்கிறது!
ஒரு தமிழாசிரியன் என்பதை எண்ணி
உவகைகள் பூக்கிறேன்,—ஒருகோடி உவகைகள்!

19.2.92



## வீடு முழுவதும் இராவணத் தமிழர்கள்

கேட்டீர்களா, சேதி?...
கிழக்கே இருந்து,—
சரியாகச் சொன்னால்
தென்கிழக்கிலே இருந்து,—
நாள்தோறும் கிடைக்கின்ற
நற்செய்தியைக் கேட்டீர்களா?...
இளைய சீலர்களின் தோள்களில்
எழுந்து நின்ற ஈழத் தமிழகம்,
அப்பன் ஆயி அக்கா தங்கை
அண்ணன் தம்பி என்னும் அனைவர்க்கும்
உரிமை ஆனது, உயர்வே ஆனது
எல்லாத் தோளிலும் இருப்பது ஏ. கே;
எல்லா நெஞ்சிலும் இருப்பது ஈழம்;
பொல்லார் சூழ்ச்சிகள் பொசுங்கிச் சரிந்திட
எல்லா விழிகளும் ஏந்துவது நெருப்பு!
வீட்டுக்கு ஒருவன் நாட்டுக்கு வீரன்
என்னும் வரலாறு புதுக்கப்பட்டது:
படலைக்கு வெளியே பகைவந்து நிற்கையில்
இளமும் கிழமும் எல்லோருமே படைவீரர்கள்
என்கின்ற வரலாற்றை எழுதிக்கொண்டே
இருட்டைக் கிழித்து எழுகிறது ஈழம்!
கேட்டுக் கொள்ளுங்கள்:
கிழக்கே, தென்கிழக்கே
வீ ... ரன் ஒரே ஒருவன் அல்ல
எந்த வீட்டிலு ... இல்லம் இராவணர்கள்
... ம இராவண வீரர்கள்!

19.2.92

## ஏறிய கொடியை எங்கே தேடுகிறீர்கள்?

விடுதலைக் கொடியை ஏற்றுவார்களா?
வீர விடுதலைப் போராளிகள்
தங்கள் இதயத் தாகத்தைத் தணிப்பார்களா?
என்று கேட்கிறான் இங்குள்ள தமிழன்;
இடதுகால் வலதுகால் தெரியாத தமிழன்...
ஏற்றுவானா கொடியை என்று
என்னை நோக்கி ஏளனம் கேட்பவன்
இரண்டு கண்களும் இருட்டான குருடன்!
இல்லை,— இவன் தமிழன் எனில்,—
எங்கெங்கும் பறக்கிற ஈழக்கொடியை
ஓரக்கண்ணிலாவது உணர்ந்திருப்பானே!
குண்டு பொழிகிற சிங்கள நெஞ்சில்
கொடி ஒன்று பறக்குது, ஈழத்தமிழ்க்கொடி!
குவலயஅவை எனும் கூட்டத்தார் நெஞ்சிலே
கொடி ஒன்று பறக்குது, ஈழத் தமிழ்க்கொடி!
பழிவாங்கிப் பழிவாங்கிப் பரிசுகெடும் இந்தியாவில்
பார்த்த இடம் எல்லாம் பறக்குது தமிழ்க்கொடி!
சிறையில் அடைக்கப்படும் சிறுவர் நெஞ்சு முதல்
சிந்தனையில் நெருப்பாகும் தமிழறிஞர் நெஞ்சுவரை—
எல்லா நெஞ்சிலும் பட்டொளி வீசுகிறது தமிழ்ஈழம்!
இவைகளைப் பார்க்காமல் எங்கோ பார்த்தவன்,
ஏறுமா தமிழ்க்கொடி என்று என்னைக் கேட்கிறான்...
ஏறிப்பார்க்க இயலாவிட்டாலும்
இந்த மண்ணின் எந்த ஒரு மணலும்
ஈழவிடுதலை வடிவாகிக் கிடக்கிறதே
இதைக் கூடவா பார்க்கமாட்டான் இடிந்த தமிழன்!

19.2.92



## ஈழத்தில் புகழ் நடத்தும் இளைஞர்களைப் பாருங்கள்!

பார்ப்பான் தமிழகத்தில் ஊடுருவிய பிறகு
பற்றாக்குறை என்பது
வாழ்வின் தவிர்க்க முடியாத ஒரு பகுதி ஆகிவிட்டது!
உணவுப் பற்றாக்குறை—
உடைவகைப் பற்றாக்குறை—
ஓய்ந்து கிடக்கும் இடத்துக்கும் பற்றாக்குறை!
மகாமக வீணடிப்புகள் மூலம்
தமிழ் வாழ்வின் மீது பற்றாக் குறையை
பரப்பி வைத்துவிட்டான் பார்ப்பான்!
பற்றாக் குறையினால் அடிபட்ட பாமரத் தமிழன்
பசி வயிற்றைப் பிசைந்து கொண்டு
படுத்துக் கிடக்கிறான், விழுந்து கிடக்கிறான்!
அதோ கிழக்கிலே, தென்கிழக்கிலே—
அவனும் தமிழன்தான் ஈழத்தமிழன்,—
அங்கேயும் பற்றாக் குறைதான்
உடைக்கும் உணவுக்கும் மட்டுமல்ல—
வெடிக்கின்ற துவக்குக்கும் அங்கே பற்றாக்குறை!
பற்றாக் குறையை எண்ணி
மயங்கிடவில்லை 'அந்தத் தமிழன்' ஈழத் தமிழன்!
பசிக்கின்ற வயிறுகளோடும்
பாதியை எட்டும் உடைகளோடும்
போதாததான ஆயுதங்களோடும்
போர் முகத்திலே நிற்கிறான், அந்தத் தமிழன்!
பகை முகத்தையும் வென்றான்
நீண்ட நெடுநாள் பார்ப்பனியத்தையும் வென்றான்
எனவே தமிழன், இவன்தான் தமிழன் ஈழத்துத்தமிழன்!

20-2-92

## இதயத்தை எழுப்புவது ஈழத்துத் தமிழ் வீரம்!

ஒரு நாள் தலையில் வைத்த பூ—
ஒழுங்காக மலர்ந்த அந்தப் பூ—
இரண்டாவது நாள் மணம் தருவதில்லை
ஒருநாள் சாப்பிட்ட உணவு—
உயர்வகைச் சத்து நிறைந்த உணவு—
இரண்டு நாளைக்கு ஊட்டம் தருவதில்லை!
'இருநாளைக்கு ஏலென்றால் ஏலாய்' என்று
நமது அவ்வையம்மையும் பாடியுள்ளார் அல்லவா?
மணம் அப்படி,—மறுநாளே இல்லாதபடி!
உணவும் அப்படி,—ஒரு நாளுக்கு மேல் உதவாதபடி!
ஈழத்தில் எழுந்து சிரிக்கின்ற
இளைய தமிழ் வீரம் எப்படி?
இன்று நடக்கின்ற வீரம்
எத்தனையோ நாள் மணக்கிறது;
எள்ளளவும் கசங்காமல் மணக்கிறது;—
இதயந்தோறும் இதயந்தோறும் ஏறி மணக்கிறது!
மணக்கின்ற மலரினும் இனியவர்கள் என்று,
வளர்க்கின்ற உணவிலும் பெரியவர்கள் என்று,
தமிழீழப் புலிகளை நான்
சரியாகப் பாராட்டினால்
தவறு என்று சொல்லுவானா எவனும்?
தலைமையானதைக் கடைமையானது என்று சொல்ல
தமிழ் நெஞ்சத்தான் மட்டுமென்ன—
எந்த நெஞ்சத்தானும் இணங்கிட மாட்டானே!
இப்போது சொல்லுங்கள், எப்படி, ஈழ வீரம் எப்படி?

20-2-92

## தெருவைப் புதுக்கிய செம்மாந்த தோள்கள்!

பொதுப்பணித் துறைக்காரர்கள்
புதுத் தெருக்கள் போடாவிட்டாலும்
பழைய தெருக்களைப் பழுதுபார்ப்பார்கள்;
ஈழத் தமிழ் இதயங்களோடு—
எங்குமுள்ள நல்ல தமிழ் இதயங்களோடு—
ஈழ நாட்டுத் தெரு வீதிகளையும்
சீராகப் புதுக்கிவிட்டார்கள் தமிழ் ஈழத் தம்பிகள்!
தென் திசை மறவன் வழிவந்த விடுதலைப் புலிகள்!
அதே தெருக்கள்—
முன்பு ஆடுமாடுகள் நடந்த தெருக்கள்—
இன்றைக்கு அவைகள் ஏறுகள் நடக்கும் தெருக்கள்!
குனிந்து குனிந்து குமைந்தவர்கள்
குவிந்து கிடந்த அந்தத் தெருக்களிலே
கூனர்கள் யாரும் இப்போது நடப்பதில்லை;
குழந்தைப் பிஞ்சுகள் கூட
நிமிர்ந்த நடை பயில்கின்ற நேரான வீதிகள் இவை!
துப்பாக்கியைக் கொண்டும் துணிச்சலைக் கொண்டும்
துள்ளிப் பீறிடும் குருதியைக் கொண்டும்
போடப்பட்ட தெருக்கள் இவை,—புதிய தெருக்கள்!
அந்தத் தெருவில் நடப்பவனே ஆண்மை நடக்கிறான்!
அந்தத் தெருவில் நடப்பவளும் ஆண்மை நடக்கிறாள்!
உலகெங்கும் உள்ள நெஞ்சுகளை மட்டுமல்ல,
ஊரிலுள்ள தெருக்களையும்
புதுக்கிப் போட்டார்கள், புகழ்வீரப் புலித்தம்பிகள்!

20-2-92

## தேடியது கிடைத்தது
## தேனாகக் கிடைத்தது!

மறத்தனம் புரிந்திட
வாய்ப்பே இல்லாத போது
வாயையும் வயிற்றையும் தமிழர்கள் நினைப்பதுண்டு
பழைய தமிழர்கள், வாழ்வுபுரிந்த தமிழர்கள் இவர்கள்

அவர்களைப் பாரக்க ஆசையாக இருந்தது;
'எலும்புக் கூடுகளாகவாவது
எங்கேயாவது பத்திரப் படுத்தப்பட்டிருப்பார்களா?'—
இரண்டு கண்களாலும் தேடித் தேடித் திரிந்தேன்...
கண்கள் இருண்டதுதான் மிச்சம்,
காணத் தேடியவர்கள் கிடைக்கவே இல்லை!

இப்படியாக அய்ம்பத்தைந்து ஆண்டுகள்
என் வாழ்விலே முடிந்துவிட்ட பிறகு,
இதழவிழ்ந்து எழுந்தது அந்தத் தமிழ்;—
இதயத்தால் நான் விரும்பியிருந்த என் கூட்டம்!
எங்கே என்று இங்கே அங்கே பார்க்கிறவர்களே,
ஈழத் திசையில் விழியைத் திருப்புங்கள்;
இதயத்தைக் குளிர்விக்கும் தமிழ்வீரம் பாருங்கள்!

'மாற்றானோடு இணக்கம் இல்லை—
அவன் மடமை நடைகளையும் பொறுப்பதில்லை!'
இப்படித்தான் நிமிர்ந்தான் என்னுடைய மூதாதை;
அப்படித்தான் எழுகிறான் ஈழத்து இளையவன்!

எலும்புக் கூடாகவாவது கிடைக்குமா என்று
ஏங்கி இருந்த என் இதயத்துக்கு
இளமை வடிவாகவே கிடைத்தது என் தமிழ் வீரம்!
ஈழத் தமிழன்,—என்னுயிர்த் தமிழன் இனிது வாழ்க!

20-2-92



## படை ஒன்று வேண்டும்
## தமிழர் பெரும் படை

ஒரு படைவேண்டும்,—தமிழர் பெரும் படை!
அன்றாடம் தமிழ்க்கொலை செய்கின்றவனை
அடித்தே கொன்றிட ஒரு படை வேண்டும்!
தமிழ் என்னும் தனி ஒளி வயிரத்தை
ஆரியக் குப்பையால் அமுக்கிடக் குதிக்கும்
அவன்களை நொறுக்கத் தமிழ்ப்படை வேண்டும்!

வாழ்வெல்லாம் தமிழனாலே—
வாழ்க்கை வசதி எல்லாம் தமிழாலே,—
பாராட்டுப் பொழிவதோ பார்ப்பான் மேலே!
இப்படிப் பிழைக்கும் எச்சிற்கல்லைகளை
இழுத்துத் தள்ளி இடித்துத் துவைத்திடப்
படை ஒன்று வேண்டும், இளைஞர் பெரும்படை!

அங்கே ஈழத்தில் அயலவன் எதிரே
ஆருயிர் தந்து தமிழ்மானம் காக்கும்
ஆற்றல் மிகுந்த புலிப்படைத் தலைவனை
'அவன்' 'இவன்' சொற்களால் அவமதிக்கின்ற
வானொலி தொலைக்காட்சிக் குட்டிச் சுவர்களை
இடிமட்ட மாக்கிடத் தமிழ்ப்படை வேண்டும்!

தமிழன் வாழ்வுக்குச் சரிப்பட்டு வராத
சாத்திரம், கோத்திரம், பூணூல் முள்களை
நாளும் நெருப்பிலே அள்ளிப் போட்டிடப்
படை ஒன்று வேண்டும், தமிழர் பெரும் படை!...

20-2-92

## மரமாய் விழுந்தது
## வயிரமாய் எழுந்தது

மரம் விழுந்தது
அதன் மீது மரம் விழுந்தது
மேலும் மேலும் ஒவ்வொன்றாய்ச் சரிந்து விழுந்தது;
ஒரு மரம் இரண்டு மரம் அல்ல—
ஒன்றன் மேல் ஒன்றாக
ஆயிரம் ஆயிரம் மரங்கள் விழுந்தன!

விழுந்த மரங்களின் மேல்
வேகவேகமாக மழை பொழிந்தது,
விரைவு விரைவாகப் புழுதி படர்ந்தது,—
ஒரு காலத்தில் காடாக இருந்த இடம்
காடு மறைந்து மேடுதட்டிப் போய்விட்டது!

திடீரென்று ஒருநாள்
காலச் சுழற்சியில் திறந்து கொண்டது அந்த மேடு:
கண்ணில் பட்டவை வயிரங்கள்,
அத்தனையும் மணிமணியான வயிரங்கள்!
விழுந்த மரங்கள் வேங்கைகளாக இருந்ததால்,
வீழ்ச்சி வரலாறே வயிர வரலாறாக எழுந்தது!

தமிழ் வேங்கைகள் விழுந்த இடத்திலே
தகதகப்பவை ஈழத்தமிழ் வயிரங்கள்!
காலம் அழிக்கிறது, எல்லாவற்றையும் அழிக்கிறது;
கனமானவைகளை மட்டும் அது புதுக்கி எடுக்கிறது!
கண்ணெதிரே பார்க்கிறோம்தானே?

கரியாகிப் போனது என்று
கணித்து வைத்த தமிழ் வரலாறு
புலியாக எழுந்தது, புதுவயிரமாய் ஒளிர்ந்தது!

**21-2-92**



## துளிகளும் வெள்ளமே
## புலிகளும் வெள்ளமே!

பல துளி பெருவெள்ளம்
பல புலிகளும் ஒரு வெள்ளமே—
ஈழத்துப் புலிவெள்ளம்!
பகைக் குப்பைகளை அள்ளிச் சென்று
பார் சூழ்ந்த கடலிலே தள்ளும் வெள்ளம்!
புலிகள் துளிகள்தான், புதிய துளிகள்;
புறநானூற்றை உள்ளடக்கிய இளைய துளிகள்!
ஆகவே அவை திரண்டு நிற்கும் போது
அலை எறியும் புதுக்கடலே விரிந்துவிடுகிறது!
அந்தக் கடலில் எழும் அலைகள்,
அருமைத் தமிழின் புகழ்ச்சி பாடுகின்றன—
அழிந்து போன வரலாற்றை மீட்டு இசைக்கின்றன!
ஆரவாரம் கேட்கிறது கிழக்கே, தென்கிழக்கே
புலிகளின் ஆரவாரம்;—
முத்தமிழ்க் கொடியேற்றும் ஆரவாரம்!
ஒரு புலி எழுந்தது ஒரே ஒரு துளியாய்
ஒவ்வொன்றாய் இணைந்தன பல்லாயிரம் புலிகள்!
புலிகள் வளர்த்துப் புகழ்கள் வளர்த்த
முன்னோன் தமிழன் முடிந்தான் என்று
முகங்கள் மலர்ந்த நமது எதிரிகள்
மூஞ்சூறு முகங்கள் அணிந்து குனிய,
தமிழ் நிலம் அனைத்தும் புலிகள் புலிகள்,
தணியா வீர இருதோள் புலிகள்!
தமிழ்ப் பெரு வெள்ளம் அலையெறிந்து பாய
தாரணி முகட்டிலே ஏறியது புதுக்கொடி,
தமிழர் உரிமை ஏந்திய நெடுங்கொடி!

**21-2-92**

## படுத்திருந்த வீரம் இன்று எழுந்து நிற்கிறது!

இலக்கியத்தில் படித்திருக்கிறேன்:
இளமாதர் அணிந்திருந்த காதணிகள்
முற்றத்து நெல்லைத் தின்ன வந்த
கோழிகளை முடுக்கிடப் பயன்பட்டன என்று;
மூத்த தமிழ் இலக்கியத்தில் படித்திருக்கிறேன்!

இன்று கண்ணெதிரே பார்க்கிறேன்,
ஈழத்து வீதிகளிலே இன்று பார்க்கிறேன்,—
எதிரி வெடித்த தோட்டாக்கள்
எங்கள் குழந்தைகளின் விளையாட்டுப் பொருள்கள்!
எங்கள் குமரிகள்
அன்றைக்குக் கோழிகளை விரட்டியது போல
எங்கள் குமரர்கள்
இன்றைக்கு எதிரிகளை விரட்டுகிறார்கள்!
ஈழத்து மண்ணிலே அன்றாடம் நடக்கிறது
எதிரி போட்டு விட்டு ஓடிய ஏ. கே. 47கள்
யாழ்ப்பாணக் கிடுகு வேலிக்குக் கடைக்கால்கள்!

மறம் பாடிய கலம்பகத்தில்
மாற்றார் போட்டுவிட்டு ஓடிய ஆயுதங்கள்
வேலியான நிகழ்ச்சிகளைப் பார்த்திருப்பவர்கள்,
வீரம் மீண்டும் விளைவதைப் பார்க்கிறார்கள்;
விதையாக விழுந்துகிடந்த தமிழ்வீரம்
முளையாகி மலர் ஏந்துவதைப் பார்க்கிறார்கள்!

அன்று காதணியால் கோழியைத் துரத்தினாள்
அவளுடைய பேரப்பிள்ளை இன்றைக்கு
அவள் பரம்பரை என்பதை ஈழத்தில் நடத்துகிறான்!

31-3-93



## ஏட்டில் இருந்தது எழுந்து வந்தது!

ஒரே ஒரு மறவன் ஒரே களத்திலே
ஏழுபேரை இயற்கை எய்துவித்தான் என்று
எங்கள் ஏடுதான் எழுதியிருக்கிறது—
ஏற்றமிகு பழந்தமிழ் ஏடு!...

காலம் கடந்துவிட்டதால்—
கனகாலம் ஆகி விட்டதால்—
ஏட்டின் எழுத்து மங்கிவிட்டதோ என்று
இதயம் கொஞ்சம் வருந்தியிருந்தேன்;
'இல்லை இல்லை, அழியவே இல்லை;
இதயப் பேனாவால் எழுதிய வரிகள்
இரத்த மையிலே எழுதிய வரிகள்
எப்படி அழியும்? ஏன்தான் அழியும்?'
என்றென்று கிழக்கே இடிக்குரல் கேட்டது!

எழுந்து நின்று பார்க்கிறேன்—
எனக்குக் கிழக்கிலே—தென் கிழக்கிலே—
எழுந்து வெடிக்கும் போர்க்களம் பார்க்கிறேன்!
ஏழுபேரை இடித்துத் தள்ளிய
அந்த வீரனே இங்கே நிற்கிறான்,
பழந்தமிழ் ஏட்டில் வரையப்பட்டவன்!
சிங்களம், இந்தியம், சீரில்லா நாடுகள்
எழுவரல்ல, எத்தனையோ நீளப்பேர்கள்—
இவர்கள் அனைவரை எதிர்த்து அழிப்பவன்
ஒரே ஒரு வீரன் ஈழப்புலி வீரன்!
பழமை திரும்பி வளர்ச்சி முகம் காட்டிட
உரிமை வெளிச்சம் உதயமாகிறது
ஈழத்தின் திசையிலே அது எழுந்து சிரிக்கிறது!

21.

## ஈழத்தின் நடையிலே இதயம் மகிழ்கிறேன்!

இந்தியக் காக்கை இடித்துக் கரைந்தும்
எந்தமிழ் மக்கள் எழுந்திடவில்லை;
சிங்களக் காக்கையின் சிற்றொலி கேட்டே
ஈழத்துத் தமிழர்கள் எழுந்துவிட்டார்கள்!
காக்கைதானே கரைகிறது என்று
கண்ணை மூடிப் படுத்துக் கொள்வோர்கள்,
வெளிச்சம் காணமாட்டார்கள்;
விளையும் காலை நிகழ்ச்சிகளையும் அறியமாட்டார்கள்!
எல்லோருக்கும் கரைகின்ற காக்கைகள்,
இளையோருக்கு எழுச்சி கரையவேண்டும்;
உரிமை பறிக்கப்பட்ட நாட்டிலே
அவர்கள் உயர்ந்து எழுந்திடக் கரைந்திடவேண்டும்!
காக்கை கரைகிறது
ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கருத்துக் கரைகிறது—
புரிந்து கொள்ளுகிறவன் உயர்ந்து கொள்ளுகிறான்,
புரியாதவன்தான் விழுந்தே கிடக்கிறான்!
இந்தியக் காக்கையோ சிங்களக் காக்கையோ
இரண்டு காக்கையும் திருட்டுக் காக்கையே!
காக்கை கரைவதைக் கேட்ட பிறகும்
கலங்களில் உணவை மூடி வைக்காதவன்
களவு கொடுத்துவிட்டுக் கண் கலங்குகிறான்;
விழிப்பாய் எழுந்து பாதுகாத்தவன்
விரட்ட வேண்டியதை விரட்டித் தீர்க்கிறான்!
இங்கே உறங்குகின்றான்,
அங்கே விழித்துக் கொண்டான்
ஈழம் மகிழ்ச்சி தருவதற்கு
இது காரணம், இதுவே காரணம், இதுதான் காரணம்!

21-2-92



## வீண் பேசுகிறவன் ஏன் பேசிட வேண்டும்?

ஒரு அய்ம்பது ஆண்டுகளுக்காவது
உரத்துப் பேசாதவனைப் பேசவிடக் கூடாது;
ஒரு அய்ம்பது ஆண்டுகளுக்காவது
உறுதி நடக்காதவனை நடக்கவிடக் கூடாது;
சாம்பிப் போன சூம்பல்களுக்குத்
தமிழ் மண்ணில் இடமே இருக்கக்கூடாது!

வாழ்வே கொள்ளை போகிறது—
மடமட்டிகள் வயிறு நிரப்புவதா?
வரலாறே முறிக்கப்படுகிறது—
கள்ளமாடுகள் துள்ளாட்டம் போடுவதா?
வழவழா அரசியலாலே
மனங்களின் எழுச்சியைக் குலைத்துப் போட்டவன்
எவனாயிருந்தாலும்
கைவிலங்கு கால் விலங்கு போட்டு
கடைசி மூலையில் கட்டிப் போட வேண்டும்!
நளினம் பேசி, நாகரிகம் பேசி
நல்ல நெஞ்சுகளை நசிக்கப் புரிந்தவன்
எவனாயிருந்தாலும் இங்கே இருக்கக் கூடாது!

இந்தப் பாடம் எழுச்சிப்பாடம்
எட்டிலே கிடைக்கவில்லை, ஈழத்திலே கிடைத்தது;
வழவழாக் கும்பலை ஒழித்துத் தள்ளி
கடமுடா இடிக்குரல் எடுத்த மறவர்கள்
கற்றுத் தந்தனர் புதிய பாடம்:
ஒரு அய்ம்பது ஆண்டுகளுக்காவது
உரத்துப் பேசாதவனைப் பேசவே விடக்கூடாது!

21-2-92

## தாயையே காத்திடும் தளிர் இறகுக் குஞ்சுகள்!

பார்த்திருக்கிறீர்களா,
எங்கேயாவது பார்த்திருக்கிறீர்களா?
குஞ்சுக் குஞ்சுக் கோழிக்குஞ்சுகள்—
அவைகளிலேயே
சேவல் குஞ்சுகள் பெட்டைக் குஞ்சுகள்
தங்கள் இளம் இறக்கைகளைத் தட்டிக்கொண்டு
ஈன்றெடுத்த தங்கள் தாய்க்குப் பாதுகாப்பாக
எழுந்து நிற்பதைப் பார்த்திருக்கிறீர்களா?

வாருங்கள், பாருங்கள்—
வளமார் ஈழத்திலே
இது வரலாறாகிக் கிடக்கிறது, பாருங்கள்!
பெரியவர்கள் என்று இருந்தவர்கள் எல்லாம்
பின்னவர்கள் ஆகிப் போன போது,
சின்னவர்கள் என்று நின்றவர்கள்
சீற்றத்திலே ஏறவேண்டியவர்கள் ஆனார்கள்!
தங்கள் தாய்த் தமிழைத்
தலையக்கள் சரிவரப் பேணாதபோது,
'நாங்கள் இருக்கிறோம் அம்மா.' என்று
நடையில் வீரம் எடுத்தார்கள் இளையவர்கள்!

தாய்க் கோழியைப் பாதுகாக்கும்
தடந்தோள்க் குஞ்சுகள்,—
சரிந்து கிடந்த தமிழ் வரலாற்றை மட்டுமல்ல,
உயர்ந்து நின்ற உலக வரலாற்றையே கூட
ஒரே நாளில் உயர்த்திப் புதுக்கிவிட்டார்கள்!
பார்த்திருக்கிறீர்களா, இதுபோல்—
ஈழம்போல் வேறெங்காவது பார்த்திருக்கிறீர்களா?

22-2-92



## போர்க்களம் என்றால் குருதி ஆறு மட்டுமா?

ஓடுகின்றன—
இரத்த ஆறுகளும் ஓடுகின்றன!
போர்முனையிலே இது வழக்கம் என்பதால்—
புதிய சில ஆறுகளையும் அங்கே
உற்பத்தி செய்கிறார்கள் உயர்தோள் ஈழப்புலிகள்:
அறிவுகளும் ஆறுகளாக ஓடுகின்றன,
வற்றாத ஆறுகளாக!
அரசத் தந்திரங்களும்
ஆறுகளாக ஓடுகின்றன,
வற்றாத ஆறுகளாக!
இரண்டு பக்கம் திரண்ட எதிரிகளில்
ஒரு பக்கத்துப் படைகளை உடைத்துத் தள்ளி
பகைவர்களைப் பாதியாக்கியது
தடந்தோள் வீரம் மட்டுமல்ல,—
தண்ணீராகப் பாய்ந்த குருதி மட்டுமல்ல,—
சரியான நேரத்து
போர்முகத்துப் புறப் பொருளும்
பொங்கிக் குமிழியிட்டது அதிலே!
ஆயிரங்களாக மட்டும் இருந்தவர்கள்
அடுக்கடுக்கான இலட்சங்களையே
புறங்காட்டி ஓட வைத்தார்கள் என்றால்,
எண்ணிக்கை வீரம் மட்டுமா அது?
இயற்கையாக ஊறிய தமிழ்ப் போர்க்கள அறிவு அது!
மறந்துபோகவே கூடாத வரலாற்று அறிவை
மறக்கவில்லை என்று காட்டிய ஈழமறவர்கள்
குருதியை மட்டுமல்ல,
அறிவையும் அதிகமாகப் பெருக்கியுள்ளார்கள்!

22-2-92

## அன்ன நடைக்கு
## இன்றைக்கு இடம் இல்லை!

ஆண்மையாவது பெண்மையாவது—
அப்படி வேறுபாடு எதுவும் இல்லை!
குடியிருந்த வீடே குட்டிச்சுவராகும் போது,
நான் அன்னநடைதான் நடப்பேன் என்று
நங்கை எவளாவது பிடிவாதம் செய்வாளா?
அவளும் ஏந்தினாள் ஆற்றல் துவக்குகள்,
அவளும் நீந்தினாள் போர்க்கள வெள்ளங்கள்!
புலி உடை தரித்த பொழுது முதலாய்
புலியே ஆகிப்போனாள் தமிழ் மங்கை!
இங்கே அல்ல, அங்கே—
ஈழத்திலே இப்படி இலக்கணம் மாறியது!
நங்கைச் செல்வியின் நடையிலே
நாலைந்து வேழங்கள் புறப்படக் கண்டால்
அங்கே ஆண் இளம் மறவர் எப்படி இருப்பர்?
அப்படி எழுந்தார்கள்,—அரிமாக்களாய் எழுந்தார்கள்!
வீடு இருந்த இடத்திலே
வீரம் மட்டுமே எழுந்தது!—
வாசல் வீரம், சுவர்கள் வீரம்,
மேலே போர்த்திய கூரையும் வீரமே!
வீர வீட்டிலே வாழ்கின்ற இருவரில்
ஆண் என்றும் பெண் என்றும் வேற்றுமை ஏது?
குடியிருந்த வீடே குட்டிச் சுவராகும்போது,
'நான் அன்னநடைதான் நடப்பேன்' என்று
தமிழ்க்குல நங்கை எவளாவது தளர்ந்து நிற்பாளோ?

22-2-92



## ஒவ்வொரு நெஞ்சிலும்
## உயர் தமிழ்ப் பாட்டு!

ஈழத்திலே மூண்ட போர்க்களம்—
இளையரை அழித்தது, முதியரை அழித்தது,
குடியிருந்த வீட்டையே குட்டிச்சுவர் செய்தது!
இழப்புகள் பற்பல ஆயிரம் கோடிகள்!...
இத்தனை தந்து இளைய மறவர்கள்
என்னத்தைக் காத்தார்கள் ஈழத்தில் என்றால்,
இனமானம் என்னும் கோட்டையைக் காத்தார்கள்!
கோட்டைப் போரிலே உயிர்கள் அழிவது
புதுமை அல்ல,—நெடுநாள் வரலாறு!
கோட்டை மதில்கள் குலைந்து விழுந்தாலும்,
கோடி கோடியாய் உயிர்கள் விழுந்தாலும்,—
இனமானம் அங்கே குலையாமல் நிற்கிறது!
தாயைக் காக்கத் தன்னுயிர் போக்கினான்
தனயன் என்பது வரலாற்றுக்கு அழகு,
தமிழ் வரலாற்றிலோ வற்றாத நடை இது!
உயிர்கள் போச்சே உடமை போச்சே—
இப்படி ஒரு போர்க்களம் தேவையா என்று
இடிந்து போகும் இலைதழைத் தமிழர்கள்,
'ஒப்புரவினால் வரும் உனக்கு அழிவு எனில்
உயிரைக் கொடுத்து அதைப் பெற்றுக்கொள்' என்று
வரைந்துவைத்த வள்ளுவத் தமிழை
உணராதிருக்கட்டும், உணர்வார்கள் பின்னை!
ஈழத்தின் இதயத்தில் எழுதிக் கிடக்கும்
இணையற்ற தியாக வரலாற்றுப் பாடலை
எழுதுங்கள், எழுதுங்கள், எங்கெங்கும் எழுதுங்கள்!

22-2-92

## புகழ் படைக்கும் வாழ்க்கையே புதுமையான பெருவாழ்க்கை!

எந்த மனிதனும் எதிரி அல்லன்—
எதிரி என்று அவன் திரும்பிய பிறகோ,
இரண்டு மனிதர்கள் ஒருவருக்கொருவர்
பச்சைமண்ணும் சுட்ட மண்ணுமே;
ஒருவர்க்கு ஒருவர் உறவுகள் இல்லை!
இந்த நிலையை எடுத்து விளக்கத்தான்
'வழவழத்த உறவைப் பார்க்கிலும்
வயிரம் பற்றிய பகையே நன்று' என
வரைந்து வைத்தான் தமிழன் பழமொழி!
பழமொழி அதுவே வாழ்மொழியாகி
தமிழ் ஈழத்தின் வாழ்வை நடத்துகின்றது:
தமிழன் தறுகண் புலியாய் மாறிச்
சரிக்கிறான் சிங்கள விமானத்தை என்றால்,—
எரிக்கிறான் சிங்கள இதயத்தை என்றால்,—
இருவரிடையே மூட்டிய நெருப்பால்
இருட்டுச் சிங்களன் அது செய்து போட்டான்!
போர்க்களத்திலே ஒப்பாரியா என்று
முன்னேயே சொன்னவன் தமிழ் மூதாதை...
மூத்தோர் சொல்லும் வார்த்தை அமிழ்தம் என்று
முடிவு செய்திட்ட ஈழத்தமிழன்
எதிரிக்கு எதிரியாய் எழுந்து நிற்பதை
யாரே பழிப்பர், கோழைகள் அல்லார்?
யாரே பழிப்பர், வீடணர் அல்லார்?
யாரே பழிப்பர், எட்டப்பர் அல்லார்?
தமிழ்வழி நடக்கும் தமிழ் ஈழ வாழ்வுக்குச்
சாற்றுவோம் புகழ்ச்சிகள் வாருங்கள், பாடுங்கள்!

[illegible]



## இரைச்சலையும் இன்று பாராட்டுகிறேன்!

வயதாகி விட்டதால்
எனக்கு ஓசைகள் அவ்வளவாகப் பிடிக்கவில்லை:
கரடுமுரடான இரைச்சல்கள் மட்டுமல்ல,
கனிவான ஓசை கூடப்
பெரிதாகக் கேட்டால் பிடிக்கவில்லை!
திரைப்படம் பார்க்கப் போனால் கூட
இரண்டு காதுகளிலும் பஞ்சு வைத்துக் கொள்கிறேன்!
கோயில், பக்தி என்ற பெயர்களில்
எழுப்பப்படுகின்ற ஒலிபெருக்கி இரைச்சலோ
எனக்குப் பிடிக்கவே பிடிக்கவே இல்லை!...
இந்த என்னுடைய மூத்த காதுகளிலும்
ஒரே ஒரு ஓசை உவகை தருகிறது—
ஈழத்தில் எழுகின்ற ஓசை அது;
என் இளவல்கள் எழுப்பும் வெடி ஓசை!
ஓசைப்படாமல் கிடக்கிற வாழ்க்கையை
ஓங்கிய வாழ்வாக மாற்றும் ஓசையாதலால்
அந்த ஓசை,—துப்பாக்கி ஓசை—
அகமனத்துக்கு அமைதி தருகிறது;
இரண்டு செவிகளுக்கும் இனிமையைத் தருகிறது!
இதனால்தான் பாராட்டுகிறேன்—
ஈழத்துப் புலித்தம்பிகளைப் பாராட்டுகிறேன்!
எந்தக் காதானாலும்
தமிழ்க்காதுக்கு இனிமை பாய்ச்சிடச்
சரியாகத் தெரிந்து வைத்திருக்கிறானே,
அதனாலேதான் அகம்நிறையப் பாராட்டுகிறேன்!

28-2-92

## உங்களுக்கு நீலம் வேண்டுமா,
## எங்களுக்கு நியாயம் வேண்டும்!

நீலவானத்தில் சிவப்பு எழுத
ஒரே ஒருவனால்தான் முடியும்,—அவன் சூரியன்!
அவனுக்குப் போட்டியாக எழுந்திருக்கிறது ஈழம்,
ஈழத் தமிழ் மறவர்கள் எழுந்து நிற்கிறார்கள்!
கண்களைச் சிவப்பாக்கி
உப்புநீர் பெருக்கிய கூட்டத்தில்,—
உதித்தது ஒரு கூட்டம், புலிகளின் கூட்டம்!
நெஞ்சில் சிவப்புத் தேக்கிய இந்தக் கூட்டம்
எதிரியின் நிறத்துக்குச் சிவப்புப் பூசியது,
தொடர்ந்து போர்க்களத்தைச் சிவப்பாக்கியது!
இன்று எகிறிப் பாய்கிறது—
எட்டாத வானத்தை எட்டிப் பிடித்து
அதன் எல்லாப் பக்கங்களையும் சிவப்பாக்கிட
எகிறிப் பாய்கிறது ஈழத்துப் புலிப்படை!
நீலம் வேண்டும் என்று நினைப்பவர்கள்
நியாயத்தைக் காத்திட முன்வர வேண்டும்;
சிறீ இலங்கை நெருப்பேற்றிச் சாம்பலாக்கும்
நியாயத்தைப் பாதுகாத்திட முன்வர வேண்டும்!
இல்லையாம் எனில்
எல்லாவற்றையும் சிவப்பாக்கிப் போடுவார்கள்—
என் இளவல்கள்
எல்லாவற்றிலுமே இரத்தத்தைப் பூசிவிடுவார்கள்!

23-2-92



## இந்த உலகத்தின்
## கடைசிப் போர்க்களம்!

ஈழத்தில் போர் நடக்கிறது—
இரண்டு தோள் ஏந்திய வீரர்களின்
இனவிடுதலைப் பெரும்போர் நடக்கிறது!
இனவிடுதலைப் போராக இருப்பதால்
ஒரே ஒரு எதிரியோடு நடக்காமல்
பல எதிரிகளின் வட்டத்துக்குள் நடக்கிறது!
இந்தப் போர் முடிகின்ற போது,
எங்கள் கொடி பறந்து கொண்டிருக்கும் என்பது
எல்லோருக்கும் தெரிந்த உண்மை;
பலருக்குத் தெரியாத உண்மைகளும் இருக்கின்றன:
பகைச் சிங்களன் மல்லாந்து விழும் போது,
மறத்தமிழ் வரலாறே புதிதாகப் போகிறது!
வாள் வீசாமலே அரியணை பிடித்த
மட்ட மனிதர்கள்—எட்டப்ப வீடணர்கள்—
மாத்தமிழ் மண்ணிலே
அதன் பிறகு பிறக்கவே மாட்டார்கள்!
'தமிழரை அடிமை கொள்வோம்' என்று
தருக்கித் திரிந்த இனத்தார்கள் எல்லாம்
தலைநிறைய முக்காடு போட்டுக் கொள்ளுவார்கள்
தலையெடுக்கும் எண்ணத்தையும்
மூடிப் புதைத்து விடுவார்கள் அவர்கள்!
உறுதியாலே மட்டுமல்ல
போர்க்களத்தில் பாய்ந்த தமிழ்க் குருதியாலும்
புனிதப்படப் போகிறது உலகம்—
எல்லா உலகமுமே இனிப் புனிதப்படப் போகிறது!

23.2.92

## வீரம் என்பது விலைக்குக் கிடைக்காது!

புத்தகத்திலே படித்து வீரத்தைப் பெறமுடியாது;
புற உலகப் பேச்சுகளிலும் அது கிடைக்காது;
மானம் என்னும் உணர்விலே திளைக்கும்
மனங்களில் விளையும் நன்முத்து வீரம்!

மானமுள்ளவன் இதயம் உள்ளவன்,
மானமுள்ளவன் தோள்கள் உள்ளவன்,—
அந்தத் தோள்களில் ஆரேனும் மோதினால்,
அங்கேயே பிடிக்கும் சடசடா நெருப்பு;
அந்த நெருப்புக்குப் பெயர்தான் வீரம்!

ஈழத்தில் போர்முனை இயன்றது என்றால்,
இருந்த தமிழன் இதயத்தோடு இருந்தான்;
இரண்டு தோள்களோடு எழுந்தே பிறந்தான்!
அந்தத் தோள்களில் அறியாமைச் சிங்களன்
அசட்டுப் பிசட்டென்று மோதிக் கொள்ளவே
அங்கே பிடித்தது இனஎழுச்சி நெருப்பு;
அதிலே தெறித்தது புதுத்தமிழ் வீரம்!

புரிந்து கொள்ளாத புல்லியர்க்கும் சொல்லுகிறேன்:
புத்தகத்திலே படித்து வீரத்தைப் பெற முடியாது—
வெறும்பேச்சுக்களிலும் அது விளையவே விளையாது!

23-2-92



## இலை உதிர் காலம் நேற்றோடு தீர்ந்தது!

இலை உதிர் காலம்
ஒரு மரத்துக்குக் குறைவாகவும்
ஒரு மரத்துக்கு மிக நீளமாகவும் இருக்குமோ?
அப்படித்தான் தோன்றுகிறது...
அருமைத் தமிழினம்
நீண்டகாலம் இலை உதிர்த்து நின்றுவிட்டது:
வீரம் என்னும் இலையை உதிர்த்து
வெகுகாலமாக நின்றுவிட்டது எங்கள் தமிழினம்!
சங்ககாலம் என்னும் சந்தனக் காலத்துக்குப் பிறகு
இரண்டாயிரம் நெடிய ஆண்டுகள்
இந்த இனத்தின் இருண்டகாலம், இலையுதிர் காலம்!
மறுதளிர் இல்லையே இல்லையே என்று
எனக்கு முன்னும் பலபேர்
மறுகி மறுகி மாய்ந்திருக்கிறார்கள்;
என்றாலும் என்னுடைய குரலிலே
இலை உதிர்காலம் உதிர்ந்து விட்டது;—
எங்கோ கிளைகளிலாவது
மறுதளிர்ப்பு ஒன்று மலர்ந்துவிட்டது!
வீரத் தமிழினத்தின் இளவேனிற் காலம்
வெற்றிச் சிரிப்போடு ஈழத்தில் தொடங்கிவிட்டது!
ஒரே ஒரு கிளைக்கு இளவேனில் என்றால்
உயர் பெரும் மரத்துக்கே அதுதானே இளவேனில்!
முடிந்தது,—இலை உதிர்வு முடிந்தது;
எழுந்தது எழுந்தது தமிழ் இனத்தின் இளவேனில்!
காத்திருந்தவர் களித்துக் கும்மாளமிட
எழுந்தது எழுந்தது தமிழ் இனத்தின் இளவேனில்!

24-2-92

## வீர மானமின்றி
## விளையுமோ ஒருவாழ்க்கை?

'கல்வி இல்லாமல் வாழலாம்—
சிலபேர் வாழ்ந்து காட்டியிருக்கிறார்கள்!
கஞ்சி இல்லாமலும் வாழலாம்—
பலபேர் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறார்கள்.

மானம் இல்லாமல் வாழ முடியுமா?—
அது துணி இல்லாமல் திரிவது போல அல்லவா?
வீரம் இல்லாமல் வாழ முடியுமா?—
அது விழி இல்லாமல் குமைவது போல அல்லவா?'
இப்படி எழுந்தனர்கள் தமிழர்கள்
இங்குள்ள தமிழர்கள் அல்ல, ஈழத்துத் தமிழர்கள்!
எனவே அங்கே எழுகிறது—
மொகுமொகு மொகுமொகு புதுத்தளிர் எழுகிறது!
வேகமாம் இலை எடுத்து—
வீரமாம் மலர் சிரித்த
வேங்கைத் தமிழர்களின் வாழ்விலே
மறுதளிர்ப்புச் சிறகடித்தது—
மானவாழ்வு நடை எடுத்தது!

அறிந்து கொண்டு சிறந்தார்கள் ஈழத்தமிழர்கள்:
'மானம் இல்லாமல் வாழ முடியுமா?—
அது துணி இல்லாமல் திரிவது போல அல்லவா
வீரம் இல்லாமல் வாழ முடியுமா?—
அது விழி இரண்டும் இல்லாமல் குமைவது அல்லவா!'

24-2-92



## தலைகள் போகலாம்—
## தன்மானம் போகாது!

உலகத்துக்குச் செய்தி அனுப்பினான் தமிழன்,—
கனகாலம் கேட்கப்படாத செய்தி—
காளைத் தமிழர்கள் வீரர்கள் என்று
கல் கல்லாக நிற்கின்ற செய்தி!...

தமிழர்கள் என்றால் 'மதராஸ்க் காரர்கள்',
தமிழர்கள் என்றால் 'அரவவாடுகள்',
தமிழர்கள் என்றால்
அயல் மொழிக்கு ஆலவட்டம் சுற்றுகிறவர்கள்;
தமிழர்கள் என்றால்
தன்மானம் குன்றியவர்கள்;—
அடிமைத்தனத்துக்கே அவர்கள் ஆசைப்படுகிறவர்கள்
ஒரு சாண் வயிற்றுக்கும்
ஒரு மீட்டர் முதுகுக்கும்
உயர்வுகளையே விற்பவர்கள் தமிழர்கள்!

இப்படிப் பரவி இருந்த இருட்டைக் கிழித்து
எழுந்தது செய்தி,—தமிழ்ச் செய்தி—
ஈழத் தமிழகம் ஏந்திய செய்தி!...
என்ன சொல்லிற்று அந்தச் செய்தி?
உதிரித் தமிழர்கள் ஒன்று சேர்ந்து நிற்பார்கள்
எதிரிகளின் விலா எலும்புகள் எண்ணி வைக்கப்படும்!
எத்தனை தலைகளை இழக்க நேர்ந்தாலும்
இனமானத்தை மட்டும் தமிழன் இழக்கமாட்டான்!
உலகத்துக்குச் செய்தி அனுப்பினான் தமிழன்
காளைத் தமிழர்கள் வீரர்கள் என்று
கல்கல்லாக நிற்கின்ற நடுகல் செய்தி!—

24-2-92

## ஈழத்தில் உருவாகும்
## இளைய புதுத்தமிழ்!

ஊருக்கு ஊர்
கொட்டில் இருக்கும், படைக்கலக் கொட்டில்!
அதாவது, வில் வாள் வேல் முதலிய
ஆயுதங்களைப் பத்திரப்படுத்தும் கொட்டில்!
அங்கே இங்கே போகும் போது
பார்த்துக் கொண்டே போவார்கள் இளையவர்கள்!
வீட்டுக்கு வீடு
அரிவாள்கள் இருக்கும், வெட்டரிவாள்கள்—
அவைகளிலே வீச்சரிவாள்களும் உண்டு!
அப்பா கேட்கும்போது
அதை எடுத்துக் கொடுப்பார்கள் இளையவர்கள்!...
ஆயுதங்களோடு பழகிய இந்த இளையவர்கள்
அடுத்து வரும் பருவத்திலே
ஆனைகளோடும் பழகுவார்கள்!
இத்தகைய இளையவர்களை மட்டுமே
பெற்றிருந்த தமிழ் இல்லம்
வீரத்தின் பண்ணையாக விளங்கியது;
வேறு குணங்களுக்கு வீரம் தலைமை தாங்கியது!
புதிய தமிழ் ஈழத்தை எட்டிப் பாருங்கள்
பதுங்குகுழிகள், படைக்கல வரிசைகள்,—
எங்கும் இளைஞர்க்கு இவைகளே காட்சிகள்!
நடை எடுப்பதே நிமிர்நடை என்றால்,—
நாளும் பொழுதும் வளர்கிறார்கள் அப்படி,—
நாயகத் தமிழைப் புதுக்கிப் புதுக்கிப் புதுக்கிய படி!

25-2-92



## இடிந்த கட்டிடம்
## எழுந்து உயர்ந்தது!

ஒருவனுக்கு இதயம் இருந்தால்,
வீரம் விளையாடும் இடமாக அது இருக்கவேண்டும்;
அவன் இளையவன் என்றால்
அந்த இதயம் அப்படித்தான் இருக்க வெண்டும்!
முதுமை அடைந்து போனால் கூட
முறுகிச் சிவப்பவர்கள் தமிழர்கள்!
அந்த வரலாற்றை அடியோடு மறந்து,
மந்த நடைகளுக்கு மாலைகள் போட்டு,
ஆள் உயர மாலைக்கு அலைந்து திரிந்து,
மலர்முடி சூடும் மயக்கிலே விழுந்து,—
மண்டையில் இருந்ததை இழந்தனர் தமிழர்—
மணியான வரலாற்றில் பூசினர் மாசுகள்!
இங்கேயும் எங்கேயும் இருந்த
இளைய தமிழர்கள் என்ன என்று விழித்தால்,
எச்சில் படங்களை எடுத்துக் காட்டியும்
இருட்டிலே தள்ளும் குடிகளை ஊட்டியும்
வளர வேண்டிய வரலாற்றை மறித்தார்கள்!
'தாய்த் தமிழகத்தை நம்பிப் பயனில்லை;
ஏடுங்கள் புரட்சிக் கவிஞனின் நடையை!' என்று
ஈழத்து இளையோர் எழுந்து கொண்டதும்,
இருட்டுக் கிழிந்து எதிரே விழுந்தது;
இருந்த பகையின் குடலும் சரிந்தது!
இறவாத் தமிழின் ஏற்றங்கள் பாடி
இன்றைய ஈழம் ஒளிகொண்டு எழுந்தது!

25-2-92

## ஈழம் எழுப்பிய
## எழில்மிகு கதிர்கள்!

மனைவியார் இருக்கிறார் மகிழ்ச்சி அடைகிறேன்;
மக்களும் பேரரும் அதையே தருகிறார்கள்;
இருந்த போதிலும் இதய மூலையில்
ஏதோ ஒரு குறை ஒட்டிக்கிடந்தது...

வீட்டைச் சுற்றி மகிழ்வுகள் இருக்கையில்
தாய்த் தமிழ் நாட்டில் அது இல்லை என்ற
அந்தச் செய்தி வரலாறாய்க் கிடந்தது!

யார்யாருக்கு எல்லாமோ
இடமளித்துக் காத்த தமிழகம்
இங்குள்ள தமிழர்க்கே இடம் இன்றிக் கிடந்தது!
ஏறி மிதிக்கக் கிளம்பியவன் எல்லாம்
இந்தத் தமிழனின் தலையிலே மிதித்தான்!
பிறந்த இடத்தில் குடிசை இல்லாதவன்
பெருந்தமிழ் நாட்டில் மாளிகை எழுப்பினான்!
தமிழரின் தாய்மொழி தமிழ்மொழி
அந்த மொழி இங்கே அருகிப் போய்விட,
ஆரார் மொழியோ துள்ளாட்டம் போட்டது,—
அதனால் தமிழனின் மகிழ்ச்சி குலைந்தது!

வாடிக் கிடந்து நான் மறுகிய போதிலே,
'இதோ பார்!' என்று எழுந்தது வீரம்;
ஈழத்துத் தமிழர்கள் நடத்திய வீரம்;
இடறு கால்களை இரண்டாய் ஒடித்தது;
என் மனத்திருந்த ஏக்கமும்
எங்கோ பறந்திட, ஒளிவந்து விரிந்தது!

25.2.9



## சாம்பிய உள்ளம்
## ஓங்கி நிமிர்ந்தது!

ஏங்கிக் கொண்டே இருந்தேன்;
என் எதிர்காலத் தலைமுறைக்கு
எடுத்துக் காட்டாய்ச் சொல்லிட
ஏற்றமிகு தமிழ் நிகழ்ச்சிகள்
இல்லையே என்று என்று
ஏங்கிக் கொண்டு இருந்தேன்.

அடிமையாய் விழுந்தவன் வீரனாய் எழாமல்
அழகிய வரலாற்றையே மாசுபடுத்தி
அல்லாடித் தள்ளாடுகிறானே,
இவன் வரலாற்றில் எடுத்துச் சொல்ல—
எதிர்கால இளைஞனை நிமிர்த்து எழுப்ப—
ஏற்றமிகு மாதிரிகள் இல்லையே என்று
ஏங்கினேன்,—நான் ஏங்கிக்கொண்டே இருந்தேன்!

அப்போது தெரிந்தன அரிய காட்சிகள்;
அன்னிய நெஞ்சுக்கு அச்சம் குவித்திட
அழகுத் தமிழர்கள் எழுந்திட்ட நிகழ்ச்சிகள்!
வேலை, வாளை விசிறிய கைகளில்
வீரத் துவக்குகள் ஏந்திய தமிழர்கள்
விரைவாய் நடக்கும் படையணிக் காட்சிகள்!

இந்த வீரத்தை எழுதிப் பார்க்கிறேன்:
ஏடு ஏடாக
விரிகிறது வீரம், ஈழத்தமிழ் வீரம்!
ஒன்றே ஒன்றுக்கு ஏங்கிய உள்ளம்
ஆயிரம் ஆயிரம் நிகழ்ச்சிகள் கண்டு
அள்ளிக் கொண்டது துள்ளிக் குதித்தது!

25-2.92

## மனித இலக்கணம் வரைந்தது ஈழம்!

வீழவே கூடாது,
கீழே விழவே கூடாது;—
போகிற வழியில் எதிரிகள் போட்ட
கல் வந்து காலை இடறும் போதும்,
விழக்கூடாது, கீழே விழவே கூடாது!
விழாத வாழ்க்கையில் சலிப்பு ஏற்பட்டு,
'விழுந்து பார்ப்போம் ஒரே முறை' என்று
விரும்பி நீயே விழும்போது கூட,
வீணர்களைச் சரிக்கும் வீரனாக விழவேண்டும்;
வீழ்த்தப்பட்டவனின் மேலேயே நீ விழ வேண்டும்!
இதைத்தான் செய்கிறான் ஈழத்துத்தமிழன்;
எந்த நிலையிலும் விழாத தமிழன்!
கல்வி கற்றுக் களிப்பு எய்திய தமிழன்
கைகள் இரண்டிலும் துப்பாக்கி ஏந்தி
காடு மேடு திரிய நினைத்ததே இல்லை;
அப்படித் திரிய ஆசை வந்ததும்
அந்நியன் நெஞ்சிலேயே அதை நடத்துகிறான்!
அமைதி வாழ்வுக்கே உழைக்கும் தமிழன்,
ஆர்ப்பாட்டங்களையே வெறுத்து வந்தவன்,
போர்க்களம் பார்க்கப் புறப்பட்ட உடனே
நான் சொன்ன சொல்லையே நாட்டி உயர்த்தினான்
'விழவே கூடாது, மனிதன் கீழே விழவே கூடாது!'

25-8-9[illegible]



## இங்கே வேர்ப்பலா அங்கே கொம்பன் பலா!

அடிமரத்தில் பழுக்கின்ற பலா உண்டு,
அது வேர்ப்பலா;
கொம்புக் கிளையில் பழுக்கின்ற பலாவும் உண்டு,
அது கொம்பன் பலா!
இரண்டு பலாக்களில் எது சிறந்தது என்றால்,
இரண்டும் சிறந்தவைகளே!
ஏனெனில் இரண்டும் பலாப்பழங்களே—
வருக்கைப் பலாப்பழங்களே!...
ஒரு காலத்தில் தமிழ்த் தாயகத்தில்
உயர்ந்து கனத்தது தமிழ் வீரம்
அது வேர்ப்பலா;
இக்காலத்தில் ஈழத்தமிழகத்தில்
எழுந்து மணம் கமழ்கிறது கொம்பன் பலா!
வேர்ப்பலா ஒரு பருவம் என்றால்
கொம்பன்பலா மறுபருவத்தில் பழுக்கிறது!
பழுக்காமல் நின்றது என்ற பழிச்சொல்
மரத்துக்கு ஏற்படுவது இல்லை!
ஏன் எனில்—
அது பலா மரம், தமிழ்வீரப் பலாமரம்!
வெடித்து வெடித்து மணக்கிறது பலாப்பழம்,
வீரம் என்கின்ற ஈழத்தமிழ்ப் பலாப்பழம்!
ஏறிகணைகளாக, ஏ. கே. 47 களாக
இன்னும் என்னென்னவோ என்னென்னவோ ஆக
ஈழத்தில் பழுத்து மணக்கிறது இறவாத தமிழ் வீரம்!

26-8-9[illegible]

## இங்கே பிறந்தது,
## அங்கே நடக்கிறது!

இரண்டாயிரம் ஆண்டுகளாகத் தமிழன்
கொஞ்சம் கொஞ்சமாக இழந்து வந்த உரிமையை
ஒரு மொத்தமாக மீட்கிறான் தமிழன்,
உயர்வீரப் பாரம்பரியத்து ஈழத் தமிழன்!
பறித்து வைத்திருந்தவன் பதறித் துடிக்கிறான்;
பறிபோகக் கூடாதது எதுவோ
பறிபோய்விட்டது போலப் பதைபதைக்கிறான்!
இழந்திருந்தவனுக்குத் தெரியும் உரிமையின் அருமை;
எடுத்து வைத்துக் கொண்டவனுக்கோ
ஏமாற்றினோம் என்ற நினைவே மறந்துவிடுகிறது!
மறந்துவிடவே—
பொருளுக்கு உடையவன் புறப்பட்டு எழும்போது
போச்சே போச்சே என்று மார்மேல் அடிக்கிறான்!

தன் சோம்பேறித்தனத்துக்கு ஈடுசெய்ய
தமிழன் இருக்கிறான் உழைப்புச் செய்ய என்று
தடித்துக் கிடந்த சுகவாசச் சிங்களன்
நாள்தோறும் பறித்த தமிழர் உரிமையை
சவுகரியமாக மறந்து போனான்—
போனதினால் இன்று புலம்புகிறான்!
புறப்பட்டு எழுந்த தமிழ்ப்படை கண்டு
போச்சே போச்சே என்று மார்மேல் அடிக்கிறான்;
அகில உலகத்திலும் அவலம் பரப்பி
அநியாயத்தை நியாயமாக்கப் பார்க்கிறான்!





எழுகின்ற இரைச்சல், போர் இரைச்சல் மட்டுமல்ல
இந்த இரைச்சலும் அங்கே இணைந்து கேட்கிறது!
ஆமாம் கேட்கிறது—
ஈழத் தமிழனின் அரிமாக் குரல் கேட்கிறது;
எதிர்த்த சிங்களவனின் அழுகைக்குரலும் கேட்கிறது!

கேட்டிருப்பீர்கள் பழமொழி—
சாது பொங்கினால் காடு கொள்ளாது என்கிற
தமிழரின் பழமொழி கேட்டிருப்பீர்கள்!
இங்கே எழுந்த அந்தப் பழமொழி
அங்கே ஈழத்தில் அழகாய் நடக்கிறது!

எங்கே நடந்தால் என்ன?
எங்கள் தமிழே நடக்கிறது—
எங்கள் தமிழ்மொழியே எங்கும் நடக்கிறது!

26-2-92

## ஆயுதம் ஏந்த
## அனுமதி வேண்டுமா?

பாதுகாப்புக்கு ஒரு துப்பாக்கி வேண்டுமென்றால்
பரிந்துரையோடு விண்ணப்பிக்க வேண்டும்;
பகட்டுப் பெரியமனிதர் ஒருவரின்
பரிந்துரையோடு விண்ணப்பிக்க வேண்டும்!
அந்நியன் ஆட்சியிலே மட்டுமல்ல—
சுதந்திரம் என்ற சொல்லுக்குக் கீழேயும்
இதுதான் நடந்தது,—ஈழத்திலும் நடந்தது!

வில்லும் வாளும் வேலும் கொண்டு
விளையாடி நடந்த தமிழரின் மக்கள்,
வீணர்கள் விதித்த நிபந்தனைக் குள்ளே
விழுந்து கிடந்து மூடிக்கொண்டதால்
வீர விளைச்சல் பதராய்ப் போயிற்று;
வெற்றி என்பது இல்லாததாயிற்று!

எழுந்தான் அங்கே ஈழத்து இளையவன்;
எழுநூறு கோடி வீரத்தின் வாரிசு!
'என் தோள்த் தினவுக்கு ஆயுதம் ஏந்திட
எவண்டா எனக்கு அனுமதி தருவது?
என்று திமிர்ந்தான் ஈழத்தமிழன்—
இருதோள்களிலும் ஏ. கே., ஏ, கே.
எடுத்த ஆயுத பாணியாய் நின்றான்!

அனுமதிக்கு விண்ணப்பிக்கும் அன்னைத் தமிழ்நிலம்
ஆச்சரியத்தோடு அதைப் பார்க்கிறது;
'ஏ. கே. 47 இதுதானா?' என்று
இந்தியத் தமிழகம் வியப்போடு பார்க்கிறது!

26-2-92



## நிறைவேறாத ஆசை
## நிறைவேற்றம் கண்டது!

கைப்பந்து விளையாடும் பழக்கம் உடையவன்;
கைகால் மூத்த இன்றைய நிலையில்,
என்னால் திடலில் இறங்க முடியவில்லை—
என்றாலும் என்னுடைய இளையவர்கள்
ஏகமாக ஆடிக் களிக்கையில்
என்னுள்ளம் கூட அவர்களோடு களிக்கிறது!
என்னுடைய இயல்பு மட்டுமல்ல—
எல்லா மனிதர்களின் இயல்பும் இதுவே!

வல்வில் ஓரியைப் படித்த எனக்கு,—
வெயில் வீர அதிகமான்
விளையாடிய போர்க்களம் படித்த எனக்கு,—
ஆயுதம் ஏந்தி அகலத் திரியவேண்டும்
என்கின்ற ஆசை இல்லாமல் போகுமா?
இருந்தது,—இளமையில் நிரம்பவே இருந்தது.
அந்த விருப்பம் வெளிப்பட முடியாமல்,
அண்டையில் அனைத்தும் கோழைகள் கோழைகள்
வீட்டின் எல்லையைத் தாண்டாத கோழைகள்:

அன்று உள்ளே அடங்கிய ஆவல்
அறுபது தாண்டிய இன்றும் இருந்தது!
அணையாதிருந்த அந்த விருப்புக்கு
அழகாய் மகிழ்ச்சி குவித்தான் ஈழத்தான்:
ஆமாம் ஆமாம் ஆமாம்—
அவனிரு தோள்களில் ஏறிய ஆயுதம்
என்முது தோள்களில் இருப்பதே போல்
இனிக்கிறேன் இனிக்கிறேன்,—தமிழ் ஈழம் வாழ்க!

27-2-92

# மகிழ்ச்சி கிடைத்தும் மடிந்து கிடப்பதோ?

ஈழம் என்ற சொல்லைக் கேட்கையில்
இங்குள்ள பல உடம்புகள்
இரட்டைப் பெருச்சாளியாய்த் துடித்திடும் போது.
என்னுள்ளம் மட்டும் இனிப்பாய் இனிக்கிறது!
ஈழம் என்னும் ஒருசொல் கேட்டு
இருநிலம் முழுவதும் வெருவந்து நிற்கையில்
என் உள்ளம் மட்டும் இனிப்பாய் இனிக்கிறது!

ஏன் என்று கேட்கிறீர்களோ?
அங்கே வீரம் அழகாய் நடத்துவோன்
என்னுடன் பிறந்தோன்,—என்னினும் சிறந்தோன்!
இதுமட்டுமல்ல என் மன மகிழ்ச்சி
செத்தே போனதாய்த் தீர்ப்புக் கூறப்பட்ட
செந்தமிழ் வீரத்துக்கு உயிர் இருக்கிறது என்று
திரண்ட தோள் காட்டி மெய்ப்பித்தான் ஈழத்தான்!

சீறி வந்த கொடும்புலியை
முறத்தால் விரட்டிய முன்னாள் தமிழச்சி
இந்நாள் அங்கே வீடுதோறும் இருக்கிறாள்!
'சிங்களத்தாலோ மற்றெவையாலோ
சிறுத்துப் போகாது தமிழ்ப் பெருவீரம்' என்று
தினம் தினம் ஈழத்தான் மெய்ப்பித்து வருகிறான்!

இவைகண்டு மாற்றான் இதயம் குலைகையில்
என் மனம் மகிழ்ச்சியில் ஏறாதிருக்குமா?
ஏறுகின்றது ஏறுகின்றது
இமயத்தின் உச்சிக்கே என் மனம் ஏறுகின்றது!





தரையில் கிடந்து சாம்பிய மனத்தை
வானத்தில் ஏற்றிய வாழ்க்கைத் தமிழன்
ஈழத்தில் எழுந்தான் என்கின்ற செய்தி
எதிரிக்குக் கசப்பாய் இருப்பதால்
எனக்கும் கசப்பாய் இருக்க முடியுமா?
அதுவே எனக்கு மகிழ்ச்சியாய் விடிவதை
அகிலமே எழுந்தாலும் தடுத்திட முடியுமா?

இழந்த விழிகளைத் திரும்பப் பெற்றிட்ட
இந்த மகிழ்ச்சியை எழுந்து கொண்டாட
மாட்டேன் என்று நான் வல்லடி பண்ணினால்
மனிதனா—
நான் ஒரு மனிதனா, சொல்லுங்கள்!

தமிழனா—
நான் ஒரு தமிழனா, சொல்லுங்கள்...

27-2-92

## ஆழமான கடல்
## அலை வீசிச் சிரிக்கிறது!

கடல் என்றால்—
அலைஅலையாக வீச வேண்டும்,
அணி அணியாக எழுந்து வீசவேண்டும்;
முத்துமுத்தாகக் குதித்துக் குதித்துச் சிரிக்கவேண்டும்!
தமிழன் என்றால்—
வீரத்தை விளைவிக்க வேண்டும்,
வீரத்திலேயே விளையாட வேண்டும்;
விளைவாக வாகைமாலை சூடிக்கொள்ள வேண்டும்!

தமிழன் ஏன் அப்படி இருக்கவேண்டும் என்றால்,—
அவன் தனிவரலாறு உடையவன்—
தலைமையான வரலாறு உடையவன்!
விலங்குகளில் சிங்கம் புலி வேழங்களாக—
விளைச்சல்களில் நெல்லும் கரும்புகளுமாக—
மனிதர்களில் வளர்முக மனிதர்களாக
வண்ணமாக எழுந்து விளையாடியவர்கள் தமிழர்கள்!
கடல் என்றால் அலைவீச வேண்டும் என்பதுபோல
வாழ்க்கை என்றால் வீரம் சிரிக்கவேண்டும் என்று
வாழ்வுக்கு ஓர் இலக்கணத்தை
வீரத்தாலேயே வரைந்துகொண்டவர்கள் தமிழர்கள்!

நேற்று இதனை
சேரம் சோழம் பாண்டியம் நடத்தி வைத்தது,
இன்று இதனையே ஈழம் நடத்துகிறது!
எங்கிருந்தாலும் தமிழன் நடத்துகிறான்;
இல்லாவிட்டால்,—எல்லோரும்
தமிழ்மாக்கடலைக் குளம் என்று சொல்லிவிடுவார்களே!

23.2.92



## ஒரே ஒரு நாளாவது
## ஈழம் சென்று வாருங்கள்!

தமிழகத்துத் தமிழர்களே!
வாழ்விலே ஒரு முறையாவது
மகிழ்ச்சியோடு ஈழம் சென்று வாருங்கள்!
யாரோ பஞ்சாபிக்காரன் போனான்;
'இஃது அன்றோ வீரம்' என்று
இனிப்புச் சொல்லிக் கொண்டே திரும்பி வந்தான்!
யாரோ கூர்க்காக்கள் போனார்கள்;
எங்களைப் பற்றிச் சொல்லியிருக்கிற வீரம்
இருமடங்காக இங்கே பெருகியிருக்கிறதே என்று
இரண்டு கண்களும் விரித்தபடி திரும்பி வந்தார்கள்!
யாரோ பீகாரி அங்கே போனான்;—
இவனும் அமைதிகாப்புப் படை என்று போனவன்தான்
அதன் அழுக்கு நடையிலே பங்குகொண்டவன்தான்;—
ஆனாலும் சொன்னான், அழகழகாகச் சொன்னான்:
ஈழத்துச் சிறுவர் சிறுமியர்கள்
எங்கள் துப்பாக்கிக் களத்திலே புகுந்து
வெடித்த தோட்டாக்களை எண்ணுகிறார்கள்
விளையாட்டுக் களமாகவே நினைக்கிறார்கள்—
வீரத் தலைவர்களுக்கு உதவிப்பணிகள் செய்வதை
இளமையின் இயல்புகளாகச் செய்கிறார்கள்!
இபபடிச் சொல்லிவிட்டு
ஏகப்பட்ட வியப்புகளை அள்ளிக் கொண்டு
இவர்களெல்லாம் அங்கே இருந்து திரும்பிவந்தார்கள்
தமிழகத்துத் தமிழர்களே,
வாழ்விலே ஒரே ஒரு முறையாவது
ஈழம் சென்று இருதோள் விம்மிட இங்கே வாருங்கள்!

28.2.92

## முத்தது மோழை,
## இளையது காளை!

அது ஈழம் இது தமிழகம் என்று
அறுப்புக் கோடு வரையாதீர்கள்;
ஒரு குடும்பத்து இரண்டு உறுப்பினர்களை
அவன் இவன் என்று தனித்தனிப் பிரிக்காதீர்கள்!
பிரிக்க வேண்டும் என்று யாரேனும் நினைத்தாலும்,
பிரிய விடாது வரலாறு—
இந்த இனத்தின் வீர வரலாறு!
இங்கே அடிசாய்ந்து கிடக்கும் போது
ஈழத்தில் வீரம் வீரமாக எழுகிறதே என்றால்,
இயற்கைதான் அது—
இதிலே வியப்படைய ஒன்றும் இல்லை;
'முத்தது மோழை இளையது காளை' என்று
முத்துச் சொல் பழமொழி கோத்தது தமிழ்இனம்!
அண்ணன் அயர்ந்தாலும் தம்பி
அடுக்கு வீரத்திலே ஏறிநிற்பான் என்று
அயலவர்களை எச்சரித்தது தமிழ்!
கடன் வாங்கிய ஆயுதங்களோடு அல்ல—
கண்டு கண்டு வடித்துக் கொண்ட ஆயுதங்களோடு
கடல் போன்ற எதிரிகளையும் தடுத்து நின்றது தமிழ்!
அந்தத் தமிழ்தான் ஈழத்தில் எழுந்து
அண்டை அயலையும் சேண்மை உலகையும்
வியப்பிலே வியப்பிலே தோய்த்து எடுக்கிறது
இங்கே இளைப்பாறிக்கொண்டு இருக்கிறான்;
இவனுடைய தம்பி முனைப்போரில் முந்தி நிற்கிறான்!
சரிதான் பழமொழி சரிதான்
முத்தது மோழை, அதன் இளையது வீரக்காளை!

28-2-92



## வயிரமாவது
## ஒளியை இழப்பதாவது?

எத்தனை காலம் இருட்டில் கிடந்தாலும்
வயிரம் வயிரமே, மணிஒளி வயிரமே!
பலகாலம் ஆகிவிட்டால்—
பட்டை தீட்டவேண்டும், அவ்வளவுதான்!
ஒளிமங்கிக் கிடக்கின்ற ஓர் இனத்தை
ஓய்ந்து போயிற்று என்று ஒதுக்கிவிடக் கூடாது;
வரலாற்று நிகழ்ச்சிகளாலே
அதன் இதயம் பட்டைதீட்டப்படும்போது
ஒளிர்கிறது இனம், முன்னைவிடவும் ஒளிர்கிறது!
பட்டை தீட்டத் தீட்ட
வயிரம் பளிச்சுமிகும் என்பது தெரிந்ததுதானே?
சாவு என்றாலே தத்தளித்துக் கிடந்தவர்கள்
நான் முந்தி நீ முந்தி என்று
சாவும் விளைகின்ற போர்முனைக்குப் போகிறார்கள்!
இந்த மண்ணில் விழுந்து கிடந்தவர்கள்
ஈழத்து மண்ணிலே எழுந்து நடக்கிறார்கள்!—
எதிரியின் நெஞ்சிலே புதுவரலாறு எழுதுகிறார்கள்!
காலத் தூசுமாசு படிந்து
கண்ணுக்குப் புலப்படாமல் இருப்பதனாலேயே
மணி ஒளிப் பெரு வயிரம்
மரக்கட்டைக் கரித்துண்டு ஆகிவிடாது!
இந்த உண்மையை எழுதிக் காட்டுவோர்
ஈழத்துப் புலிகள், இளையபுலிகள், விடுதலைப் புலிகள்!
எங்கெங்கும் எழுதிக்கிடக்கும் உண்மையை
இங்குள்ள தமிழர்கள் எழுந்துநின்று பார்க்கவேண்டும்!

28-2-92

## உதித்து எழும் கதிரை
## யாரோ தடுத்திட முடியுமோ?

நீலமாக விரிந்து கிடக்கும் வானத்தை
நிமிர்ந்து நின்று பார்க்கவேண்டும் மனிதர்கள்!
'நான் பார்ப்பேன், நீ பார்க்கக் கூடாது' என்று
நடுத்தடை விதிப்பவன் மண்டையை
உடைத்திட வேண்டும், உடனேயே செய்ய வேண்டும்!
இதுதான் வீரம்;
எங்கே என்றாலும் இதுதான் வீரம்;
யார் நடத்தி வைத்தாலும் இதுதான் வீரம்!
உரிமைக்குத் தடைபோடுகிறவன் தோலை
உரித்து உப்புத் தடவுகிறவன் மட்டுந்தான்
மனிதன்,—வாழ்வு தெரிந்த மனிதன்!
எந்த இடத்தில் பிறந்து நிமிர்ந்தாலும்
இவன் மனிதன்;—இவன்தான் தெளிவுள்ள மனிதன்!
உலக நாடுகள் ஒவ்வொன்றிலும்,
அவைகளின் பகுதிகள் ஒவ்வொன்றிலும்,—
பிறந்தது உண்டு மனிதர்கள்—
பெருமைப்பட அவர்கள் போற்றப்பட்டதும் உண்டு!
இந்த வரலாறுதான் நடக்கிறது,
இப்போது,—ஈழத்திலே நடக்கிறது:
இன உரிமைக்கு இடைத்தடை போட்ட
பேரின வாதத்தின் மண்டை உடைக்கப்படுகிறது!
இங்கே உள்ள தமிழன்—
வாய்ச்சொல் வீரனாக நின்று கொண்டு இருப்பதால்,
அங்கே ஈழத்தில் அலைஎறியும் வீரத்தை
அதிகமான வியப்போடு பார்க்கிறான்—
ஆனாலும் இவனும் புரிந்து கொள்ளவே பார்க்கிறான்!

28.2.92



## வீரத்தைவிட அழகியது
## வேறு ஒன்றுமே இல்லை!

அழகை விரும்புகிறவன்,
வீரத்தை விரும்புகிறான்;—
வீரத்தைவிட அழகானது வேறென்ன இருக்கிறது?
இளையவர்கள் எல்லோருமே
வேகமாக எழுகிறார்கள் என்றால்—
வீரத்தையே விரும்புகிறார்கள் என்பது பொருள்!
வயது தளர்ந்த முதியவர்கள்
இளமையின் சுறுசுறுப்புக்கு ஏங்குகிறார்கள் என்றால்
வீரத்தை மட்டுந்தான்
அவர்கள் விரும்புகிறார்கள் என்பதே பொருள்!
கையும் காலும் தோளும் துடிப்புமாக
தன் குழந்தை வளர வேண்டும் என்று
தாயானவள் விரும்புகிறாள் என்றால்
தளிர்தளிரான வீரத்தையே அந்தத் தாயும்
விரும்புகிறாள் என்பது பொருள்!
ஈழத்து மண்ணிலே இரவும் பகலும்
இனமானப் போர்க்களம் நடக்கிறது என்றால்
ஈழத்துப் பாட்டன் பாட்டியரும்
ஈழத்துத் தாயர் தந்தையரும்
ஈழத்து இளையோர் அனைவரும்—
எல்லோரும் எல்லோரும்
வீரத்தை விரும்புகிறார்கள் என்பது பொருள்—
வீரத்தைத்தான் விரும்புகிறார்கள் என்பது பொருள்!

28-2-92

## ஈழம் திருத்தி எழுதிய இல்லற இலக்கணம்!

களிறு எறிந்து பெயர்தல்
காளைக்குக் கடன் என்று
கடமை விதித்தவள் தமிழ்த்தாய்;
அதாவது கடந்த காலத்துத் தமிழ்த்தாய்!
காளை என்று சொல் குறித்தாலும்
கன்னியரையும் சேர்த்துத்தான் குறித்தாளா?
கடல் சூழ்ந்த இலங்கையின்
கவினார்ந்த ஈழத் தமிழகத்திலே
காளையர்—கன்னியர் என்ற வேறுபாடு இல்லையே!
இவன் ஏ. கே. 47 ஏந்தினால்,
அவளும் அதையே ஏந்துகிறாள்!
இவன் ஏழு எதிரிகளை வீழ்த்தினால்
அவள் அவர்களில் எட்டுப்பேரை வீழ்த்துகிறாள்!

'பெண்கள் ஏணை அசைத்தலும் கூடும்
அதை யாரசைத்தாலுமே ஆடும்' என்றான் கவிஞன்
இன்று போர்க்களம் பார்க்க அவன் வாழ்ந்திருந்தால்
தந்திரக் களத்தின் எந்திரத் துப்பாக்கி
தையலின் கையில்தான் சரியாக வெடிக்கும் என்று
தமிழ்ப் புதிய புறப்பாட்டுப் பாடி இருப்பானோ?





இனிவரும் தமிழகத்தில் எங்கள் தமிழ்த்தாய்
போர் என்று வந்தால், 'புறப்படு மகளே' என்பாளோ?
ஏறு தழுவுதலில் இளைஞனைத் தேர்ந்தெடுத்த தமிழகம்
போர்க்கள வெடிச் சத்தத்தின் இடையே
மூரிக்காளைக்கு முல்லையைத் தேர்ந்தெடுக்கும் என்று
முகம் மலர்ந்து அகம் மலர்ந்து சொல்லுவாளோ?
காலம் மாறுகிறது, கடமை விரிவடைகிறது:
பெண்மகள் ஆயுதம் ஏந்தியதில்லை என்ற
அந்த வரலாறு இன்று முடிந்துவிட்டது!
புலிக்களத்தின் போர்முனையைப் பற்றி
புதிய புறநானூறுகள் வரையப்படும் போது,
போர்முனை இலக்கணம் மட்டுமல்ல
புதுவாழ்வின் இலக்கணமே புதுக்கப்படப் போகிறது!
அந்த நானூற்றில் ஒன்றாகிய
இந்த உரைவீச்சிலும் அதுதானே நடந்திருக்கிறது!
இரத்தக் களமாகிய போர்க்களத்தை மட்டுமல்ல
இனிமைத் தளமாகிய இல்லறத்தையும்
என்றுமில்லாதபடி புதுக்கிவிட்டது ஈழம்!

29-2-92

## துப்பாக்கி ஏந்திய தோள்கள் வாழ்க!

உரிமம் ஒன்று இந்திய அரசிடம் வாங்கினோம்
துப்பாக்கி ஒன்று வைத்துக் கொள்வதற்காக!
உரிமம் பெற்ற துப்பாக்கி ஆதலால்
பயன்படுத்துவதற்குக் கட்டுப்பாடுகள் அதிகம்!
சுடுகைக்கு அடிக்கடி பயன்படாத அந்தத் துப்பாக்கி
துருப்பிடித்துப் போய்க் கிடந்தது...
'துப்பாக்கி உனக்கு எதற்காக?' என்று
துடுக்கு அதிகாரி மிரட்டுவானே என்று—
அவ்வப்போது அதற்கு எண்ணெய் தடவி
அழகழகாகத் துடைத்து வைத்திருப்போம்...
இந்தியத் தமிழகத்திலே
துப்பாக்கி வைத்திருந்தார்கள் இப்படி;
துட்டுப் பெருக்கம் உள்ளவர்கள் வைத்திருந்தார்கள்!
வாங்கி வைத்திருந்தும் துப்பாக்கி
பயன்பட வில்லையே என்று என்று
வாய் வெருவிக் கிடந்தவனின் காதுகளிலே
படார் படார் என்று வெடித்தது துப்பாக்கி—
பக்கத்திலே, ஈழத்திலேதான் வெடித்தது துப்பாக்கி!
ஏழை பணக்காரன் என்று இல்லாமல்
எல்லாத் தமிழனும் துப்பாக்கி வைத்திருந்தான்—
எவன் ஒருவனும் எண்ணெய் தடவவில்லை;
எதிரியின் உயிர் கொண்டே அதைத் தூசி தட்டினான்!





இவனிடம் போய்,
'உரிமம் வாங்கினாயா?' என்று
ஒருவன் கேட்டுவிடுவானா—
கேட்டுவிட்டு உயிர்தப்பிப் போவானா?
துப்பாக்கி இருந்ததே, சுடாத துப்பாக்கி—
அதை வைத்திருந்ததற்காக வெட்கப் படுகிறேன்;
அதை அன்று வைத்திருந்தவர்களுக்காக
இதோ இன்றைக்கு நான் வெட்கப்படுகிறேன்!

ஏன் என்றால்—
உரிமம் பெறாத துப்பாக்கிதான்
உரிமை காக்க உதவும் என்பதை
அன்று அவர்கள் மறந்திருந்தார்கள்;
இன்று நான் அதைத்தெளிவாகத் தெரிந்துகொண்டேன்

எந்தப் பாடத்துக்கும் முதற்பாடமாம்
இந்தப் பாடத்தை எனக்குக் கற்பித்த
ஈழம் வாழ்க, அதன் இரண்டு தோள்களும் வாழ்க!

29.2.92

# துப்பாக்கி கொண்டு சிற்றில் இழைக்கிறார்கள்!

சின்னச் சின்னப் பையன்கள், சிறுமிகள்
தெருவிலே சிற்றில் வைத்து விளையாடும்
சின்னச் சின்னப் பெண்கள், பையன்கள்—
ஆயுதப் பயிற்சிக்கு அணிவகுத்து நிற்கிறார்கள்;
ஆதிக்க ஒழிப்புக்குத் துணிவெடுத்து நிற்கிறார்கள்!
இங்கே அல்ல,—ஈழத்திலே நிற்கிறார்கள்...

மாடு ஆடுகளும் வண்டி வாகனங்களும்
மாறிப் போவது போல
மண்களும் கூட மாறிப் போகுமோ?
வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்
தமிழ் கூறும் நல்லுலகம்;
அந்தத் தமிழ் உலகத்திலேதான்
அய்ந்து வயதுப் பச்சைப் பாலகன்
ஆடை கோடி அணிந்து
அழகிய வேலைக் கையிலே ஏந்தி
குருதி கொப்புளிக்கும் போர்க்களத்தை நோக்கி
குறுகுறு நடந்தான் என்று கூறுகிறது புறநானூறு!
இது இன்றைக்கு நடக்கவில்லை;
அவன் நடந்த மண்ணிலே நடக்கவில்லை!—
அருகிலே ஈழத்தில் இருமடங்காக நடக்கிறது!

காலப் போக்கில் புவியியல் மாறுதல்
இந்த மண்ணுக்கு இருந்த வெப்பத்தை
ஈழ மண்ணுக்கு எடுத்து மாற்றி விட்டதோ?





இரத்தம் கொதித்த அந்த இடத்திலே
குளிர்ந்த இரத்தம் பாய்கிறது இங்கே!
குடும்பப் பெருமையும் குலத்தின் பெருமையும்
குலைந்த சருகாய் விழுந்து கிடக்கின்றன!
அந்த நாளில் தாயகத்துக்குச்
சோறு அனுப்பிக் கொண்டிருந்த கழனி ஈழம்
இந்த நாளில் வீர எழுச்சியையும்
ஏற்றுமதி செய்யும் நிலைமை ஆயிற்று!
சோற்றுக்குப் பஞ்சம் வந்தாலும்
தோள் வீரத்துக்குப் பஞ்சம் வராது—
இது தமிழகம், அந்நாள் தமிழகம்!
அதையும் இறக்குமதி செய்ய வேண்டிய
அவலம் வந்துவிட்டதே என்று
கவலைப்படவில்லை நான், கவலையே படவில்லை!

காரணம் என்ன எனில்—
கதிர் சுடரும் வீரக் கனலை
எனக்கு அனுப்பிக் கொண்டு இருப்பவன்
என் இளவல்,—ஈழத்தில் வளர்ந்த
என் தாயே பெற்றெடுத்த என் இளவல்!

அதோ பாருங்கள்
அழகிய சிற்றில், துப்பாக்கிச் சிற்றில்
அங்கே தம்பியும் தங்கையும் அமைக்கிறார்கள்
காணக் காண எனக்கு மகிழ்ச்சி பொங்குகிறது,
அதைக் காணக் காண எதிரிக்குஇதயமே கலங்குகிறது!

29-2-82

## விலங்கை ஒடிக்கும் வெடியின் சத்தம்!

ஒன்றிரண்டு அல்ல,—
ஒரு கோடி உவகைகள்
ஊற்றித் தருபவர்கள் ஈழத்துத் தமிழர்கள்!
யானும்
என்னைச் சுற்றி இங்கே கிடந்தவர்களும்
எத்தனை குட்டுப்பட்டும் எழுந்திருக்கவே இல்லை;
எழிலார்ந்த தமிழைக் கீழே தள்ளி
இந்தியம் என்னும் கருப்புத் துணிபோட்டு மூடிவிட்டு
இருக்கிறோம் நாங்களும் என்று இங்கே இருந்தோம்!
யாரோ பெரியார்கள்'
இல்லையே இங்கே தமிழ் வாழ்வு என்று
இடித்து இடித்துச் சொல்லிய போதும்
எழுந்திருக்காமல் விழுந்தே கிடந்தோம்!
இச் சொல் கேட்க இருசெவி இருந்தது,—
எட்ட இருந்தது 18 மைல் அப்பால்—
ஈழம் என்ற பேர் கொண்டு இருந்தது!
மண்ணில் வைத்த மாற்றான் கால்களை
படக்கென்று ஒடித்துக் கையிலே கொடுத்தது!
சுரணை என்பதே இல்லாமல் ஆகி
துவண்டு கிடந்த எங்கள் செவியிலும்,
துப்பாக்கி கேட்டது எந்திரத் துப்பாக்கி!
அந்த ஓசைக்கு ஆற்றல் இருந்தது—
அடிமைத்தனத்தை ஒடிக்கின்ற ஆற்றல்!
ஆதலால் இப்போது எழுகிறோம் மெதுவாய்,—
அடுத்த கிழமை பாருங்கள்
வெடியாய் விடியும், அதையும் வந்து பாருங்கள்!

29-3-93



## வீரன் தோள்களில் விளைகிறது செங்கோல்!

வீரம் உடையவன் புவியை ஆண்டால்
வேறெல்லாம் சரியாய் விளையும் என்று
புறநானூற்றோன் புகன்றது சரிதான்:
இரண்டு தோள்களில் ஏ. கே. 47 கள்
ஏந்திய மறவன், ஈழத்து மறவன்,
எடுத்து வைக்கும் ஒவ்வோர் அடியும்
செங்கோல் அடியாய்த் திருத்தமாய் நடக்கிறது!
கரந்திருந்து தாக்கும் கணக்கை முடித்து
படை எதிர்ப்படையாய்ப் பாய்ந்திட்ட பின்னர்,
எதிரியின் நெஞ்சில் இயந்திரம் வெடிக்கிறது;
ஈழத்து மண் எங்கும் புத்தாட்சி நடக்கிறது!
புறநானூற்றோன் புகன்றது பொய் இல்லை:
புகழ்த்தோள் வீரன் புதுநடை எடுக்கையில்,
ஆயுத நடையாய் அடங்குவதில்லை;
அகமும் புறமும் புகழும் என்ற
அனைத்துத் தளத்தையும் புதுக்கி நடத்துகிறது!
அண்டை அயலார் அங்கீகாரம்
தரவில்லை என்ற கதை உண்மையாயினும்
எந்த வகையிலும் ஈழத் தமிழகம்
சொந்த அரசாய்ச் சோடை போகவில்லை!
ஈழ அரசின் இளைய பொற்கொடி
உள்ளும் வெளியும் எங்கும் பறக்கிறது;
உயர் அரசு ஒன்று சரியாய் நடக்கிறது!
புறநானூற்றோன் பொய்யோ சொல்லுவான்?
'வீராதி வீரன் அரசுக் கட்டில் ஏறினால்
விளைவது அரசு, அதுவே அரசு, எந்தமிழ் அரசு!'

29-2.93

## இரண்டு பேரும்
## தமிழ்ச் செல்விகளே!

அன்றைக்குத் தன் தாய்த் தமிழகத்திலே
அன்னநடை எடுத்தவளும்
என் மகள்தான்—தமிழ்மகள்;
இன்றைக்கு ஈழத் தமிழகத்திலே
ஏ. கே. 47 எடுக்கிறாளே
இவளும் என் மகள்தான், தமிழ்மகள்!
அவளுக்கு ஒரு தாயகம் இருந்தது,
அழகிய தண்ணீர்க் குடத்தை இடுப்பிலே ஏந்தி
அதிலே அழகுநடைக் கோலமிட்டாள்;
இவளுக்கு ஒரு உரிமைத் தாயகமில்லை—
அதை மீட்டு எடுத்துத் தன் தங்கைகளுக்குக்கொடுத்திட
இவள் இடிமுழக்கப் படையை எடுத்தாள்!
தருணமறிந்து நடப்பதிலே
வல்லவர்கள் என் தமிழ்ச் செல்விகள்!
அன்னையராய் அமைச்சுகளாய்
அவசியம் ஏற்பட்டால் அடிமைகளாய்
நிற்பவர்களே பெண் மக்கள் என்று
நிகழ்த்தியிருக்கிறார்கள் தமிழ்ப் பெரியவர்கள்!
அந்தப் பாரம்பரியம் அடிவற்றிப் போகாமல்
அன்னநடை எடுத்தவளின் தங்கைச் செல்வி
இன்று ஆச்சரியப் போர்நடை எடுத்திருக்கிறாள்!
ஈழத்திலே எடுத்த நடையினாலே இவள்
எல்லாத் தமிழகங்களுக்கும் நடை கற்பிக்கின்றாள்
என் மகள்கள் தமிழ்மகள்கள்—
ஏற்றம் புரியும் என் இதயத்தின் வார்ப்படங்கள்!

23-2-02



## ஒரே ஒரு வெடியில்
## உதித்தது பொன்னொளி!

இருட்டிலே மூழ்கிக் கிடந்தது அந்த வீடு!
இருட்டு என்றால் அப்படி இருட்டு—
எது எங்கே எப்படி என்று
ஏதும் தெரியாத இருட்டிருட்டு!
கூடத்திலே இருட்டு
கொல்லைப் புறத்திலே இருட்டு
உள் ளே எல்லாம் ஒரே இருட்டு!
அப்படி ஒரு வீடு இருக்கிறது என்று
ஆருக்குமே தெரியாத அப்படி ஒரு இருட்டு!
அந்த இருட்டுக்குள் இருந்த வீட்டின்
ஒரே ஒரு அறையிலே
யாரோ ஏற்றினார்கள் விளக்கு—
எழுந்து சிரிக்கும் மின்சார விளக்கு!
அறைக்குள் இருந்த இருட்டு அப்படியே ஓடிவிட்டது;
அக்கம் பக்கத்து அறைகளிலும்
வெளிச்சம் சென்று எட்டிப் பார்த்தது!
எட்டிப் பார்த்த அந்த அறைகளிலும்
எது எங்கே எப்படி என்பது
இப்போது நன்றாகவே புலப்பட்டுத் தெரிந்தது:
விளக்கு ஏற்றியது ஒரே ஒரு அறையில்
வெளிச்சம் அணிந்தன மேலும் சில அறைகள்!

மட்டுமல்ல,—அது மட்டுமல்ல—
அங்கே இருந்த அழகிய வீடு
எல்லோர் கண்களுக்கும் இப்போது தெரிந்தது!
இருட்டுக்குள்ளேதான் இருந்தது—
என்றாலும் அந்த ஓர் அறை வெளிச்சத்தில்
வீடு இருக்கிறது என்று எல்லோருக்கும் தெரிந்தது!
ஈழத் தமிழ்ப் போராட்டத்தைப் பற்றித்தான்
எழுதுகிறேன் என்று நினைக்கிறீர்களோ?
அப்படி நினைக்க உங்களுக்கு உரிமை உண்டு;
அட்டியில்லை, உரிமை உங்களுக்கு உண்டு!

எப்படி என்றால்,—
எங்கும் அளாவிய தமிழ் இன வீட்டில்
எங்கோ வெடித்த இன உரிமைப் போராட்டம்,
'இருக்கிறது தமிழ் இனம்' என்னும் இனிய செய்தியை
இதுவரை இருட்டுக்குள் இருந்த அந்தச் செய்தியை—
ஏந்தி எடுத்து உலகுக்கே சொல்லிவிட்டது!

இருட்டுக்குள்ளே மூழ்கிக் கிடந்தது அந்த வீடு;
நேற்றுவரை இருட்டுக்குள் மூழ்கிக்கிடந்தது அந்தவீடு!

1-8-92



## அடையாளம் தெரிந்தது
## எங்கள் அல்லலும் தீர்ந்தது!

நாலு மாடுகள் சேர்ந்தால்
ஒன்றோடு ஒன்று முட்டிக் கொள்ளும்;
நாலு தமிழர்கள் சேர்ந்தாலும்
ஒருவரோடு ஒருவர் முட்டிக் கொள்ளுவார்கள்!

இது வரலாறு—இடைக்கால வரலாறு...
இடைக்காலம் என்ன?
நேற்றுவரையில் இதுதான் வரலாறு!

இன்று காலையில்—
அந்த வரலாறு முற்றிற்று;
அழகிய வரலாறு ஒன்று தொடங்கிற்று:
நாலு தமிழர்கள் ஒன்று கூடினார்கள்,
நாவலந் தீவின் அருகில் ஒரு தீவிலே
நாலு தமிழர்கள் ஒன்று கூடினார்கள்,—
மேலும் சிலர்களைக் கூவி அழைத்தார்கள்:

'மாடுகளாக இருந்தது போதாதா?
மனிதர்களாக எழுந்து உயர்ந்திட வேண்டாமா?'
இப்படி ஒரு கேள்வியை எழுப்பிக் கொண்டார்கள்;
இரண்டு தோள்களிலும் எழுச்சி கண்டார்கள்!
இதயத்தில் தாயக உணர்ச்சி கொண்டார்கள்!

இவர்கள்தான் மனிதர்கள், ஈழத்து மனிதர்கள்—
ஏனெனில், இவர்கள்
தாங்கள் தமிழர்கள் என்பதைப் புரிந்து கொண்டார்கள்!

1-8-92

## வரைந்த கோடுகளுக்குள் மாபெரும் விளையாட்டுக்கள்!

பிறப்பது நம் கையில் இல்லை—
அது வேறு ஏது எதன் கையிலோ இருக்கிறது.
இறப்பதும் நம் கையில் இல்லை—
அது எவரெவர் கைகளிலோ இருக்கிறது!

இந்த இரண்டுக்கும் இடையிலே
இனிமை தருவது என்ன என்றால்,—
கிளியந்தட்டு விளையாடுவது போல
கீறப்பட்ட இந்தக் கோடுகளுக்கு உள்ளே
முழுமையாக வளரலாம் மனிதர்கள்—
முந்திய வரலாற்றைத் திருத்தலாம் மனிதர்கள்!

புதிய புதிய விளையாட்டு விதிகளைப் போல
முழுதுமே மாற்றித் திருத்தலாம் மனிதர்கள்!
திருத்திய மனிதர்கள் வெற்றி பெற்றார்கள்;
திருட்டு முழி முழித்தவர்கள் நின்று போனார்கள்!

இந்த உண்மையை அறிந்து கொண்டதும்,
எழுந்தான் தமிழன்,—ஈழத்துப் புலியன்:
எல்லைக் கோட்டுக்குள் விளையாடத் தொடங்கி,
இருதோள் ஏந்திய துப்பாக்கிச் சிரிப்பால்,—
எல்லைகளையே விரித்துப் போட்டான் இவன்!





இந்தத் தமிழனின் வீரத்துக்கு
இதுதான் எல்லை என்று இருந்த
அந்த எல்லையையும் அழித்துப் போட்டான்!

வாளும் வேலும் ஏந்திய வீரம்
வரையறைப்பட்ட பழைய வீரம்;
துப்பாக்கி ஏந்திச் சுறுசுறுப்பாகி
சுடுகணை, எரிகணை ஏந்திய வீரமோ
வாழும் தமிழுக்கு மலை உச்சியாக
ஈழத்துத் தமிழன் எடுத்திட்ட வீரம்!

பிறப்புக்கும் சாவுக்கும் இடையில்
பெரிய நிகழ்வுகள் உள்ளன என்னும்
அரிய உண்மை தெரிந்து கொண்ட புலியன்,
அன்றாடம் சாகிறான், அன்றாடம் வாழ்கிறான்;
அன்னைத் தமிழின் ஒரு மகனாகிறான்!

செய்தி கிடைக்கிறது, அன்றாடம் கிடைக்கிறது;
செந்தமிழ் நாட்டின் சிதறிய மதில்களில்
அன்றாடம் செய்திவந்து அலைமோதுகின்றது!
இங்குள்ள தமிழன் இடிந்தே கிடப்பானா?
எத்தனை நாள் கிடப்பான்?—
இங்குள்ள தமிழன் எத்தனை நாள் விழுந்துகிடப்பான்?
1-3-93

## செவியிலே தேன், நெஞ்சிலே தித்திப்பு!

செவிகளிலே தேன் பாய்ந்தால்
நெஞ்சத்திலே அது வந்து தித்திக்குமோ?
தித்திக்கிறது, தேனடையாகத் தித்திக்கிறது!
இனமானத்தை மீட்டெடுக்க
என் தமிழ் ஈழத் தம்பிகள்
இறப்பை அள்ளி அள்ளித் தழுவுகிறார்கள்,
அதையே எதிரியின் நெஞ்சில் சொருகுகிறார்கள்!
இந்தச் செய்தி காதில் விழுந்தோறும்
இதயக் கதவு சிலிர்த்து மகிழ்கிறது!
எப்போதோ கேட்ட எழுத்துச் செய்தி—
இப்போது இங்கே நிகழ்ச்சிச் செய்தியாய்
எழுந்து நடந்து உயருகிறது என்றால்,
எந்தத் தமிழன் தான் இனிப்பாக மாட்டான்?
இனியான் எனில் அவன் எப்படித் தமிழன்?

ஏடுகளில் படித்தேன்—
எங்கோ சில வீடுகளில் பார்த்தேன்:
உயிர் கொடுத்துப் புகழ் கொள்ளுதல் என்னும் அறம்
அந்த அளவில் அடங்கிவிட்டதோ என்று
அய்யமும் அயர்வும் கொண்டு நான் நின்றேன்...
அந்தச் சமயத்தில் வந்தது செய்தி;
ஆயிரம் தேன்களின் அடுக்கான செய்தி!

செத்துப் போன தமிழர்கள் அத்தனை பேரும்
மறுபடி பிறந்தனர் பிறந்தனர் என்று
செய்தி செப்பிற்றுச் செந்தமிழ் ஈழம்!
செவிகளிலே தேன்வந்து பாய்ந்தது—
நெஞ்சுக்குள்ளே அது நிறைவாக இனித்தது!

3.3.92



## போர்க்களத்தில் புதிய வரலாறு!

இடைவற்றிப் போனால் என்ன?—
நடை வற்றிப் போகுமோ தமிழ் இனம்?
இழந்துவிட்ட காலத்தை ஈடுசெய்ய
உறுதி நடை எடுக்கிறது அந்த உயர் இனம்!

இரண்டாயிரம் ஆண்டுகளாக
எழுந்து நடக்கவே முடியாமல்
விழுந்து கிடந்து போன தமிழ் இனம்
இன்று நடக்கிறது, ஈழத்தில் நடக்கிறது;—
இரண்டு கால் நடையல்ல—
எந்திரத் துப்பாக்கி எழில் நடை நடக்கிறது!
வீட்டிலே வைத்திருந்த வீராங்கனைகளையும்
வேகநடையோடு இணைத்துக் கொண்டு நடக்கிறது!

ஆமாம்; அன்று தாய்மார்கள்
களிறுகளை மட்டும் களத்துக்கு அனுப்பினார்கள்;
இன்று ஈழத்துத் தாய்மார்கள்
இளம் பிடிகளையும் அங்கே அனுப்புகிறார்கள்!
வீணாகிப் போன அடிமை நாட்களை
ஈடுகட்டி எழுப்புவதற்காக
இளம் பெண்களின் வாழ்வையும்
எதிரிக்கு எதிரான எரிகணைகளாக
எரித்து வெடிக்கிறது ஈழத் தமிழகம்!

இல்லாவிட்டால்
வரவேற்கக் காத்திருந்த வல்லவளின் செல்வி
தன்னுடைய இளமை வாழ்வையே
போர்க்களத்திலே நிறுத்த மாட்டாள் அல்லவா!

2-3-92

## எழுதிய எழுத்து அழிவதே இல்லை!

சாகத் தெரிந்தவர்கள் தான்
சாவையே வென்றவர்கள் என்று
தமிழில்தான் எழுதி வைத்தேன்;
ஈழத்துத் தமிழிலே அல்ல—
இந்தியத்துத் தமிழில்தான் எழுதினேன்!

எத்தனை தாமரை பூத்திருந்தாலும்—
அத்தனைக்கும் மத்தியில் அலைந்து திரிந்தாலும்
தேன் உண்டு மகிழ்வதில்லை பச்சைத் தவளை
எங்கிருந்தோ வருகிறது வண்டு, பொன்வண்டு,
எடுத்து எடுத்துத் தேனை அருந்துகிறது!
தங்கள் மரணத்தால் வாழ்வை எழுதும்
தமிழ்ப் பொடிகளும் பொடிச்சிகளும்
தாய்த் தமிழில் நான் எழுதியதைச்
சரியாகப் படித்துக் கொண்டார்கள்;
அங்கிருந்து வந்து படித்துக் கொண்டார்கள்!
வாழ்க்கையினால் எழுத முடியாத
வலிய நெடு வரலாற்றைத்
தங்கள் மரணத்தால் அவர்கள் எழுதுகிறார்கள்!

மேலே சொன்ன கருத்தை
நான் எழுதினேன் என்றா சொன்னேன்?
'மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தனரே' என்று
தமிழ் முன்னோரே எழுதி வைத்தார்கள்...

அவர்களுக்குத் தெரியாதா—
அடி அழிந்து போனாலும் ஆலமரம்
விண்ணை அளக்கும் என்பது தெரியாதா?

3-3-93



## அந்தக் குஞ்சுகள் அளித்திட்ட இன்பம்!

எனக்கு மூச்சுத் தருவது ஈழம்
என் பேச்சுக்கு ஒரு வீச்சுத் தருவதும் ஈழமே!

அங்கே ஒரு போர்க்களம் வெடித்தில்லையாயின்,
அதிலேயே என் மகன்களும் மகள்களும்
ஆயிரம் வீரங்கள் பொறித்தில்லையாயின்
நினைப்பதற்கு என்ன உண்டு என் நெடு வாழ்விலே?
நிகழ்த்துவதற்குத்தான் பேச்சு என்ன உண்டு?

சப்பாத்து மாட்டியும் மாட்டாமலும்
தாவுகிறார்கள் போரிலே என் தமிழ்ப்பிள்ளைகள்;
இறுக்கிக் கட்டிய இடைவார்களுடன்
எதிரியை மிதிக்க நடக்கிறார்கள் என் பெண் குஞ்சுகள்!

இங்கேயும் இருக்குதுகளே இடிமண்ணுகள்—
எவனுக்கு ரசிகர்மன்றம் வைக்கலாம்,
எவனுக்குக் காதல் கடிதம் எழுதலாம்,
எவனோடு சேர்ந்து அய்ஸ்கிறீம் சப்பலாம்
என்றென்று பறக்கும் மடப் பெட்டைகள்—
எத்தனையோ பிறந்து திரிகின்றனகள் இங்கே!

அத்தனை அழுக்குகளையும் ஊதித் தள்ளும்
அடங்கா நடைப் புயல்காற்றைப் போல
அங்கே நடக்கிறார்கள் என் தமிழ்ச் செல்விகள்!
அந்த நடையினாலே அன்றோ
அடுக்கு நடை ஆற்றல் நடை எடுத்தது புலிப்படை!

பேசப்பேச மேலும் இருக்கிறது—
ஈழம் தந்த இன்பம் இன்னும் இன்னும் இருக்கிறது!

2-3-93

## என் நெஞ்சைத் திறந்து நீங்களே பாருங்கள்!

எனக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே
எடுத்துச் சொல்லிவிட்டான் என்னவன்,—
இன்று ஈழத்து இளையவர்களைப் பார்த்து
யான் இசைக்க விரும்பியதை—
அன்று ஒரு வள்ளல் பெருமகனைப் பார்த்து
அழகாய்ச் சொல்லி விட்டான் என் முன்னவன்:
அவன் மீது தனக்கு உள்ள
அளவிறந்த அன்பை அறிவிக்க விரும்பியவன்,
'என் நெஞ்சம் திறப்போர் நிற்காண்குவரே' என்று
நிகழ்த்தி விட்டான்—தமிழில் நிகழ்த்திவிட்டான்!
என் இதயத்தைத் திறந்து பார்க்கிறேன்
எல்லோரும் போர் வீரர்கள்—
ஈழத் தமிழ் விடுதலைப் போர் வீரர்கள்!
அடிமனமோ நுனிமனமோ,—என் மனத்தில்
அவர்களைத் தவிர ஆருக்குமே இடம் இல்லை;
அத்தனை பாசத்தோடு
என் நெஞ்சை அடைத்துக் கிடக்கிறார்கள் அவர்கள்!
இருக்காதா பாசம்?—
இன்னுயிரைத் துரும்பாக்கி,—
தமிழ் உரிமையையே தலைமையாக்கி—
நடக்கிறார்கள், நடக்கிறார்கள், அப்படி நடக்கிறார்கள்!
எப்படி நடக்கிறார்கள்?
தமிழ் நடந்தபடி நடக்கிறார்கள்!
அதாவது, தமிழன் உரிமை நிலைபெறும்படி!
எனவே, என் குஞ்சுகளே,
என் இதயத்தின் இடமெல்லாம் உங்களுக்கே!

3-8-98



## மரமான மரமே மறுதளிர் எடுத்தது!

எங்கள் வீட்டு மாமரம்
இலை இலையாகத் தளிர்த்தது
கிளை கிளையாக விரிந்தது!

எங்கும் பெய்த மழை
இந்த மரத்துக்கும் பெய்தது;
எங்கும் வீசிய தென்காற்று
இந்த மரத்தையும் தழுவிச் சென்றது;—
என்றாலும் பூக்கவில்லை
இனிய காய் ஏந்தவும் இல்லை மரம்!
எப்படியோ நின்றது:—
இந்த மரம் மாமரம்தானா என்று
யார்யாரோ கேட்கும் விதமாக நின்றது!

நிற்பதை விட நீ செத்துப் போகலாமே என்று
நெஞ்சு கனத்த தீந்தமிழ்ப் பாவலர்கள்
நெருப்பு வேதனை எடுத்த போதும்,
நின்றது மாமரம்,—பூக்காமலே நின்றது!

அங்கொன்றும் இங்கொன்றுமாக அல்ல
ஆயிரம் ஆயிரமாகக் காய்த்துத் தள்ளிய மரம்—
'அந்த மரம் அல்லவோ இந்த மரம்?' என்று
பார்த்தவர்கள் எல்லாம் பரிதாபப் படும்படி
மக்கள் பெருக்கம் என்கின்ற
பச்சை இலைகளோடு மட்டுமே நின்றது மரம்!

எட்டுத் திசைகளிலும் கிளை போக்கிய
எங்கள் மாமரத்தின் ஒரே ஒரு கிளையாவது
ஏந்தி விடாதா ஒரே ஒரு மலரை என்று
என் வாழ்வு தொடங்கிய நாளிலிருந்தே
ஏங்கிக் கிடந்தேன், அதை எழுதிக் கிடந்தேன்...
திடீரென்று வந்தது அந்த நாள்
தென்திசையாகிய இராவணத் திசையில்
சிறிதாகப் போக்கிய முதிய கிளையில்
சில்லென்று பூத்தது எங்கள் மாமரம்,
தீர வீரங்களின் மறுபூ பூத்தது!
சுழன்றடித்த வரலாற்றுக் காற்றில்
சொரணை பெற்றுவிட்டது எங்கள் மாமரம்!
உண்டு உண்டு தடித்த கொப்புகள்
ஒன்றுக்கும் உதவாமல் நின்றிட,
உரிமைக் குறை என்னும் உணவுப் பஞ்சத்தில்
ஒரு பாதி வற்றிய ஈழத் தமிழ்க் கிளை
ஒவ்வோர் இலையிடுக்கிலும் துப்பாக்கிப்பூ எடுத்தது!
ஒவ்வொரு பூவும் உயிர்கொண்டு மலர்ந்தது!
'உரிமை உரிமை உரிமை இல்லாமல்
ஒரு நாளாயினும் இருப்பேனோ?' என்று
இருதோள் உயர்த்தினான் ஈழத்துத் தமிழன்!
எல்லாத் தமிழனும்
பொல்லாங்கு தீர்ந்து புதுமை மலர்ந்திட்ட
வல்லமை நேரத்தை வாழ்த்திக் களிக்கிறான்;
மலர் மலர் மலர் மலர் மலர் மலர் எடுக்கிறான்!
திட்டுக்களால் வெட்டுப்பட்ட
அந்த மாமரமா இந்த மாமரம்?!
அயர்ந்து போய்விட்டேன், மகிழ்ந்தே போய்விட்டேன்!

3-3-92



# முற்றிற்று என்பது முதுதமிழ்க்கு இல்லை!

மனிதக்குல வரலாறு மகிழ்ச்சி தரும் வரலாறு;
செத்துப் போன மனிதர்களும்
இங்கே வாழ்வார்கள் புகழ் வடிவிலே!
மனிதக்குல வரலாறு மகிழ்ச்சி தரும் வரலாறு...

குளம் வற்றிப் போகும்—
கொஞ்சி மலர்ந்த தாமரைகள் அற்றுப் போகும்—
மழை கூட அந்தப் பக்கம் நடமாடாது!
வற்றிய நீர்க்குளம்
வறட்சியாலே வெடித்துக் கிடக்கும்;—
'தீர்ந்தது எல்லாம் தீர்ந்தது' என்று
பார்த்தோர் எல்லாம் பகர்ந்திட்ட பிறகு,—
வெம்மை வெடிப்பின் விளிம்பின் மீது
வீர முகம் காட்டும் ஒரு சிறிய புதிய இலை!
முடிந்தது என்று முற்றுப் புள்ளி வைத்தவர்கள்
புள்ளியைத் துடைத்துப் புதுமுகம் சிரிப்பார்கள்
வந்த இலை தாமரை இலை என்று
பார்த்துப் பார்த்து மகிழ்ச்சியில் நனைவார்கள்!

வற்றி வெடித்த மாண்புமிகு தமிழ்நிலம்
வற்றாத வீரத்தை ஈழத்தில் எடுத்தது;
மளமள மளமள வளர்ச்சிகள் விரிந்து
மறத் தமிழ் வாழ்வுக்கே புத்தெழில் தந்தது!

மறந்து போகாதீர்கள்—
வெடிப்போடிய குளம் மட்டும் அல்ல,
விழி மூடிய தமிழனும்
வீரத்தளிர் எடுப்பான், வீழ்ச்சியைத் தடுப்பான்!

3-3-92

## தென்றலைத் தடுப்பவன் புயலை மறிப்பானோ?

தென்றலாய் வீசினால் தடுத்து நிற்பவன்
புயலாக எழுந்தால் புறமுதுகு காட்டுவான்!
குரைக்கும் நாயிடம் குளிர்ச்சி காட்டினால்
கோணல் பல்லையே அது காட்டும் என்பதை
நல்லறிவாளர்கள் உணர்ந்திட வேண்டும்!
கொத்துக் கொத்தான முத்துக்களை
குறுங்கால் பன்றியின் முன்னே போட்டால்
முத்துக்களை மட்டுமா மிதிக்கும்?—
முத்தை வழங்கிய அவரையும் விரட்டும்!
தென்றலாக வீசுவது மிகமிக நல்லது;
செந்தாமரைப் பூக்களின் மீது வீசவேண்டும்—
சிலும்பி நிற்கும் முட்களின் மீது வீசக் கூடாது!
ஒரு சாண் வயிற்றை மட்டுமே நினைப்பவன்,
அதுவும் மற்றவனுக்கு இல்லை என்று நினைப்பவன்,
உரிமைப் பெருமைகள் உணராத மடவோன்!
மடவோன் இருட்டு மடிய வேண்டுமெனில்
வலிய வெளிச்சத்தைப் பாய்ச்சிட வேண்டும்!
மெழுகுவர்த்திச் சிரிப்புக்கு விலகாத இருட்டை
வெடிச் சிரிப்புத் துப்பாக்கிதான் விலக்கிடவேண்டும்!
இந்த உண்மையை எண்ணிப் பாராமல்
இத்தனை காலம் இருந்தார்கள் தமிழர்கள்
பெற்றுப் பெருகிக் குவிந்தார்கள் தமிழர்கள்!
புயலாய் எழுந்தான் புலித்தம்பித் தமிழன்—
தூசியாய் மறைந்தது துடுக்கர் கெடுநடை!
தென்றலாய் எழுந்தபோது தடுத்து நின்றவன்
புயலாய்ப் புறப்பட்ட போது புறமுதுகு காட்டினான்!

3.3.92



## குருதியால் வரைந்த பெருமைச் சித்திரம்!

ஈழத் தமிழன் இதயத் தளத்தில்
எத்தனை கனவுகள் உள்ளன என்பதை
இறந்தோர் தொகை கொண்டு எண்ணிக் கொள்ளலாம்!
வட இலங்கை என்று மாற்றுப் பெயர் பெற்ற
தமிழ் ஈழத்தில் தலைகள் உருள்வது
நாளாவட்ட நிகழ்ச்சியாகி விட்டது;
மாற்றார் தலைகளை மண்ணில் உருட்ட
மாத்தமிழ்த் தலைகளும் சில உருள்கின்றன!
இருபக்கத்து இதயமும் திறந்து
என் தமிழ் மண்ணில் இறங்கிய குருதி,
என் தமிழ் இளவல்களின் ஆசைக் கனவுகளை
எழுதி எழுதி எழுதிச் செல்லுகிறது!
மாற்றானுக்குக் கைகட்டி நின்ற
மடமை தொலைக்க அவன் கனவு கண்டான்,
ஏற்றமிகு தமிழாட்சி எழிற் கொடியை
ஏற்றிட வேண்டும் எங்கெங்கும் என்று
எழுந்த நாள் முதலாய் இவன் கனவு கண்டான்;
ஆசைக் கனவுக்கு விலை ஏதும் இல்லை—
இலட்சியக் கனவு அப்படிக் கிடைக்குமா?
தலைகளைத் தலைகளை விலையாகக் கேட்கிறது;
'தருகிறேன் தருகிறேன்!' என்று இவன் கொடுக்கிறான்
வீரமரபு மறுபடி தளிர்த்தது—
விம்மிதம் ஓங்கிய தமிழ் வீர மரபு!
அந்தத் தளிரின் அழகிய வண்ணத்தில்
ஆயிரங் காலத்து வரலாறு சிரிக்கிறது;
தியாகந்தான் வாழ்வு என்ற சித்திரம் சிரிக்கிறது!

3-3-92

## உயிரால் எழுதிய
## ஒரு புது ஓவியம்!

நினைக்க நினைக்க இனிக்கும் நிகழ்ச்சிகள்
நிகழ்த்தும் வாழ்க்கையே சீரான வாழ்க்கை!
ஒரு மறவனின் வாழ்க்கை இது—
ஒவ்வொரு தமிழனும்
மறவன் மகன் மறவன் ஆதலால்
அவன் வாழ்நாட்கள் ஒவ்வொன்றும்
அழகிய நாட்களாக நடைபெற வேண்டும்!

இந்த உண்மையை நெஞ்சில் எழுதி
இருந்த வரையில் தமிழன் இருந்தான்;
இலட்சியக் கனலை ஆறப்போட்டதும்
இறந்தே போனான், தமிழன் என்பவன்!
ஒப்பாரி பாடி ஓலம் எழுப்பி
உலகோர் அவனை முடித்துப் போட்டார்கள்!

புதைகுழி கீறிப் புறப்படும் மனிதன்
புவியில் என்றேனும் பிறந்தது உண்டோ?
என்றே பிறர்கள் இடிந்து நிற்க,
இறந்த தமிழன் ஈழத்தில் எழுந்தான்;
இறவாத வரலாற்றை நீளமாய் வரைந்தான்!
எனக்கும் கூட வியப்பாய்த்தான் இருந்தது
என்றாலும் வரலாற்றை எடுத்துப் பார்த்ததில்—
இவனுக்கு இறப்பே கிடையாது என்பது
எழுத்தெழுத்தாக எனக்குத் தெரிந்தது!
உலகம் உணரவேண்டும் அல்லவா?
உயிரை உருவி அதை எழுதுகின்றான்;
உயர்தமிழ் ஈழத்தான் அதை எழுதுகின்றான்!

[illegible]



## உரிமைப் போரா,
## உறியடி விளையாட்டா?

முள் இருக்கிறது என்பதால்
முறுவலிக்கும் புதுமலரின்
அழகு குறைந்தா போகிறது?
சொல்லப் போனால்—
கவர்ச்சி அதிகமாக அல்லவா ஆகிறது!

கூர் இல்லாத மலர்களைப் பறிப்பதை விட
கூர் முட்கள் சூழ்ந்த நறுமலர்களைக்
கைநீட்டி எடுப்பதிலேதானே
கனத்த மகிழ்ச்சி அடைகிறான் மனிதன்?
இயற்கையாகப் பூத்த எங்கள் சுதந்திரத்தை
யாரோ ஒரு சிங்களவன்
முள்வேலி வைத்து மூடிவைக்கப் பார்த்தால்
விடுவார்களா எங்கள் இளையவர்கள்?

வீரத்தையே மூச்சாகச் சுவாசிக்கும்
வேங்கை நெடுமரத்தின் கன்றுகள் அல்லவா அவர்கள்!
முள்ளைப் பிரிக்க முன்னே சென்றார்கள்;
மூண்டு வந்த வெடிமருந்து நாற்றத்தைத்
துச்சமாக மதித்துத் துணைத்தோள் உயர்த்தினார்கள்!

வீரனின் கழுத்தில் புரள வேண்டிய மாலையை
விட்டத்திலே மறைத்து வைத்துவிட்டால்
விட்டுவிடுவானா அந்தக் காளை?—
உயிரைப் பணயம் வைத்து அதை எடுக்கமாட்டானா?

4-8-93

## கும்மிருட்டை நீக்கிய குதூகல விளக்குகள்!

மனிதன் பெருமைப் படுகிறான்,
மற்றவர்களிடமெல்லாம்
சொல்லிச் சொல்லி மனிதன் பெருமைப்படுகிறான்!
தன் மக்கள் ஏவாமக்களாக இருந்தால்,
தன்மேல் படிந்த மாசினைச்
சரியாகத் துடைப்பவர்களாக இருந்தால்,—
மனிதன் மகிழ்ந்து சொல்லிப் பெருமைப்படுகிறான்!
அதோ தமிழ் மனிதன்—
அனைத்து நாடுகளிலும் படர்ந்த தமிழ் மனிதன்—
அகம் மகிழ்ந்து நிற்கிறான்;
ஆர்வம் பொங்க மகிழ்ந்து நிற்கிறான்!
இளைய தமிழர்கள் ஈழத்துத் தமிழர்கள்
இயற்றி வரும் முயற்சிகளாலே,
இரண்டாயிரம் மூவாயிரம் ஆண்டு வரலாறு,
ஏற்றமிகு தமிழினத்தின் வரலாறு—
எழுத்து எழுத்தாகப் புதுக்கப்படுவது கண்டு
இங்குள்ள தமிழனும் மகிழ்கிறான்,
எங்கெங்கு உள்ள தமிழனும் பெருமை ஏந்துகிறான்!
எண்ணெய்ப் பிசுக்குப் பிடித்து
இருளடைந்து கிடந்த குத்துவிளக்கை
இல்லத்துச் செல்வி புதுக்கித் துலக்கி
ஏற்றி வைத்தால் எப்படி இருக்குமோ
அப்படி ஒளிர்கிறது அனைத்துத் தமிழ்நெஞ்சும்!
ஈழம் வழங்கிய இறவாமையாலே
இந்தத் தமிழன் புதுவாழ்வு பெற்றதால்
எல்லா உலகும் என் இதயம்போல் நிமிர்கிறது!

4-3-93



## நடை என்றால் இது அல்லவா நடை!

நினைத்தே இராத நிகழ்ச்சிகள்—
நினைத்தே இராத முறைகளில்
நிகழ்ந்தே விட்டால் எப்படி இருக்கும்?
நெஞ்செல்லாம் தேனருவி பொங்கிப் பாயாதா?
அப்படித்தான் பாய்கிறது இப்போதும்:—
ஆற்றல் மறவர்கள் ஈழத்துப் புலிகள்
அடிஅடியாக முன்னேறுந் தோறும்
அப்படிக் களிக்கிறது தமிழரின் நெஞ்சம்!
இரண்டு கால்களால் மட்டுமா நடக்கிறான்?
இதய வீரத்தால் மட்டுமா நடக்கிறான்?
இருநிலம் நனைக்கும் பச்சை இரத்தத்தால்
ஏறி நடக்கிறான் ஈழத் தமிழன்!
என்றோ மறைந்த தமிழ் மான மாண்பை
இருதோள்களிலும் ஏந்தி நடக்கிறான்;
'இப்படி நடந்தான் எங்கள் தமிழன்' என்று
ஏடுகளில் மட்டும் படித்திருப்பவர்கள்,
'இதோ நடக்கின்றான் அப்படியே' என்று
இதயம் குதிகொள்ள நடக்கிறான் ஈழப்புலியவன்!
இருபது முப்பது நூற்றாண்டுகள்
இங்கே இப்படி நடந்ததே இல்லை;
எனவே யாரும் எதிர்பார்க்கவில்லை!
ஈழத்துக் குருதியில் நெருப்பு ஏறிட
என்றும்இல்லாத வெடிப்பு நிகழ்ந்தது;
என் நெஞ்சுக்குள் தேனாறு நடந்தது!
என்னை நினைக்கிறேன், ஈழத்தை நினைக்கிறேன்,
எப்பப்பா! இளமைக்கே ஓரினம் என் தமிழினம்!

4-3.92

## அள்ளக் குறையாத்
## ஆனந்தப் பெருமகிழ்ச்சி!

மண்டை கனக்கிறது, மகிழ்ச்சியால் கனக்கிறது!
இரத்தம் படர்ந்த புதிய தளத்தில்
என் தமிழ் இளவல் நடக்கிறான் என்னும்
எண்ணத்தில் பிறக்கும் வண்ண மகிழ்ச்சியால்
என் இதயம் இரண்டு மடங்கு கனக்கிறது!
இந்தச் சுமையை,—இன்பச் சுமையை,—
எத்தனை பேர்க்கோ பகிர்ந்து கொடுத்தபின்
இன்னமும் இதயம் மகிழ்ந்து கனக்கிறது!

ஈழத்திலிருந்து இங்கே அடிக்கிற
இயற்கைக் காற்றல்ல இப்போது அடிப்பது;
இருதோள் மறவனின் இதயக் காற்றே
இப்போது அங்கிருந்து இங்கே வருகிறது!
இந்தக் காற்று என்போல் தமிழர்க்கு
மூச்சுக் காற்று,—புத்துயிர்ப் புதுக் காற்று!

காலம் காலம் கனகாலமாக
காற்றே இன்றிக் கிடந்த என் தலையில்
உரிமைப் புயலை உருவாக்கும் காற்று
ஓடி வந்ததும் திணறிப் போனேன்;
உண்மையா என்று திகைத்துப் போனேன்!
உண்மைதான் என்ற உண்மை தெரிந்ததும்
ஓரே குடத்துக்குள் மூன்றுகுடம் ஊற்றியது போல்
உவகை நிறைந்து உள்ளம் கனக்கிறது!

எல்லாத் தமிழரும் இங்கே வாருங்கள்
என்னகத்து மகிழ்ச்சியை வாரிக் கொள்ளுங்கள்!
அப்போதும் குறையாதோ?—
அள்ளிக் கொடுக்கும் கல்விதானோ இந்த மகிழ்ச்சி?

4-8-92



## சேவல்தான் என்றால்
## கூவத்தான் வேண்டும்!

சேவல் என்றால் அது சிறகடிக்க வேண்டும்,—
சிறகடித்துக் கூவ வேண்டும்;
கூவி உலகத்தையே எழுப்பி வைக்க வேண்டும்!
இல்லாவிட்டால்
அதை யாரும் சேவல் என்று சொல்லமாட்டார்கள்;
தின்பதற்கு வளர்க்கப்படும்
கறிக் கோழி என்றே கழித்துப் போடுவார்கள்!

இளைஞன் என்றால் அவன் எழுந்து நிற்கவேண்டும்;
'யான் ஓர் இளைஞன்' என்று
சொல்லாமலே சொல்ல வேண்டும்,—
துடிப்பான நடை மட்டுமே அவன்நடக்க வேண்டும்!
இல்லாவிட்டால் அவனை
இளைஞன் என்று எவர் சொல்லுவார்கள்?

சேவல் கூவுவதைப் பார்த்திருப்பீர்கள்—
கூரையில் ஏறிநின்று கூவுகிறது,
குலப்பெருமையை நாள்தோறும் கூவுகிறது!
யாரேனும் எதிர்க்குரல் எடுத்தால்,
சேவலின் காலில் கத்தி நகம் இருக்கிறது—
சீறி எழுந்து சின்னாபின்னப்படுத்தி விடுகிறது!
அதனால்தானே சேவல் என்று சொல்லுகிறார்கள்!

ஈழத்து இளமை இதைத்தான் நினைத்தது;
எல்லா உலகத்தையுமே எழுப்பி வைத்துவிட்டது!
ஈழத்து இளமை சேவலாய்ச் சிறகடித்தது;
எதிரி திமிர்ந்து வந்த போது
இரண்டுகால் நகங்களையும் இரத்தத்தில் தோய்த்தது!

5-8-92

## உட்கார்ந்து கொண்டு உரிமை பேசுவதா?

உறுதி இருக்க வேண்டும்,
உணர்வோட்டங்களிலே
உறுதி இருக்கவே வேண்டும்:
அடிக்க வேண்டிய இடத்திலே
அன்பாகத் தடவிக் கொடுக்கக் கூடாது;
வெடிக்க வேண்டிய இடத்திலே
வீர ஆமணக்காக வெடித்துத் தெறிக்க வேண்டும்!
உரிமைகளைக் கணக்கிடும் போது
உட்கார்ந்திருந்து கணக்கிடக் கூடாது,—
உறுதியாக எழுந்து கணக்குப் பண்ண வேண்டும்

இங்கே இருப்பவர்கள் தெரிந்து கொள்ளுங்கள்;
ஈழத்தில் இருப்பவர்களைப் புரிந்து கொள்ளுங்கள்:
உரிமை என்பதை உரிமையோடு பார்த்தார்கள்;
அது உருவப் பட்டபோது—
தங்கள் பருவ வீரத்தைக் காட்டினார்கள்!
மனிதனாக வாழ வேண்டுமென்றால் ஒருவன்,
தமிழனாக வாழ வேண்டும்—
தன் உரிமைக்கே வாழுகின்ற ஈழத்தமிழனாக!

ஒரு மாடு கூடத்
தன் மேல் ஈ வந்து உட்கார்ந்தால்
சகிப்பதில்லை, வால்வீசி விரட்டுகிறது!
அப்படி வாள் வீசிய தமிழன் மீது
ஆரோ சவாரி ஏறப் பார்த்தால்
அத்தனை தலைகளும் உருளும் என்பதை
அழகாக எழுதினான் ஈழத்தமிழன்
ஏனென்றால் எழுந்து நின்று கணக்குப் போட்டான்!

5-3-92



## மனிதனாக இருந்தால் அடையாளம் வேண்டும்!

நண்டு தெரியுமா, நண்டு?
நேரான கால்கள் கூட இல்லாத
ஒரு நிலைகெட்ட பிராணி நண்டு!
அந்த நண்டுக்குக் கூட
வளை இருக்கிறது, வாழ்ந்திருக்கும் வளை!
கடற்கரையில் பார்க்கிறீர்கள்
குளத்தோரம் பார்க்கிறீர்கள்
வயல் வெளிகளில் பார்க்கிறீர்கள்—
நண்டுக்குக் கூட ஒரு வளை இருக்கிறது!

எத்தனையோ காலமாக இருப்பவன் தமிழன்;
இரண்டு காலில் எழுந்து நின்றவன் தமிழன்;—
இவன் பரம்பரை இன்றைக்கு
இந்த நண்டை விடவும் நலிந்து நிற்பதா?
தனக்கென்று ஒரு நாடு இல்லாமல்,—
அதற்கென்று ஒரு கொடி இல்லாமல்,—
அலைந்து கொண்டே திரிந்தால்
அவனுக்கு அடையாளமே இல்லாமல் போகுமே!
இப்படி நினைத்த ஈழத்தமிழன்
ஏற்றினான் ஒரு கொடி வீரத்தமிழ்க் கொடி!

ஏற்றிய கொடியைக் காப்பதற்காக
இரத்தம் சிந்தத்தான் வேண்டும் என்றால்,
இதோ இருக்கின்றேன் என்று அவன் சொன்னான்!
இதயம் அறுபட்டுச் சாயும் போதும்,
'எங்கள் தமிழ்க்கொடி வாழ்க!' என்றான்!
ஏன் எனில் நண்டுக்குக் கூட ஒரு வளை இருக்கிறது!

5-3-92

## தமிழ்ப் பாடம் படித்த தறுகண்மைப் பிள்ளைகள்!

படித்துப் படித்துப் படித்த பாடம்—
பழைய தமிழனின் வாழ்க்கைப் பாடம்:
இருப்பதாய் இருந்தால் வீரனாய் இரு நீ—
இருப்பதாய் இருந்தால் புகழோடு இருநீ
இல்லையேல் உலகில் தலைகாட்டாதே!
தீனிக்குச் செலவாய் பூமிக்குப் பாரமாய்
மனிதன் இருக்கவே கூடாது என்று
மாத்தமிழ் மனிதன் வாழ்வியல் சொன்னான்!

அந்தப் படிக்கே அநேக காலம்
இந்தத் தமிழன் எழுந்துதான் நின்றான்!
யாரோ பின்புறம் சொருகிய கத்தியால்
என்றோ ஒருநாள் இவன் நிலைகுலைந்தான்:
வீரவாழ்க்கை விளங்கிய தோளில்,
ஈரம் வற்றி இரக்கம் சுண்டியது!
அன்று முதல் இவன் ஆண்ட பொருள்கள்
வில்லும் வாளும் வேலும் அல்ல—
வேறெதோ நூறுகள் பூசிப் பொடிந்தான்!

பொடியாய்ப் போன அந்தத் தமிழனின்
புதுமகன் இன்றைக்கு ஈழத்தில் நிற்கிறான்
போன வரலாற்றை முழு முழுதாக
மீட்டு நிலைநாட்டி வீரம் படித்தான்!
முப்பாட்டன்மாரின் மூச்சுக் காற்றிலே
முழுகி எழுந்த ஈழத்தமிழன்
இழுக்குகள் அனைத்தும் இழுத்துத் தள்ளினான்,
இனிமேல் தமிழன் தமிழனே என்றான்,—
ஏனெனில் இவன்தான் தமிழ்ப்பாடம் படித்தான்!

5-3-93



## கோடை காலத்தில் மண்பானைத் தண்ணீர்!

கோடைகாலத்து மண்பானைத் தண்ணீர்
குடிக்கச் சுவையாக இருக்கிறது,
உடல் நலத்துக்கும் உகந்ததாக இருக்கிறது!
விடியும் போது கிடைக்கும் வெளிச்சம்
விழிகளுக்கு இனிமையாக இருக்கிறது,
வீரப் பார்வைக்கும் ஊட்டமாக இருக்கிறது!
மாற்றான் வந்து மதிலுக்கு வெளியே நிற்கும் போது,
மனத்திலே சூடு ஏறுகிறது:
வாழ்விலே புதிய செயல் நடை ஏறுகிறது!
பானைத் தண்ணீரைப் பருகி மகிழ்ந்தவன்
காலை வெளிச்சத்தில் கண்கள் குளிர்ந்தவன்
எதிரி வந்ததும் இருகால் பிடிப்பானா?
'இப்போது குடிப்பது எதிரியின் இரத்தம்,
இருகண்ணால் பார்ப்பது அவன்களின் ஓட்டம்,
என்பதாக இருப்பது வாழ்க்கை—
எல்லோருக்குமே இருக்க வேண்டிய வாழ்க்கை!
என்பதை அறிந்தான் தமிழன்,—
ஈழ மண்ணிலே எழுந்து வரும் தமிழன்!
ஆமாம், அந்தத் தமிழர் புதுப்படை,—
அவசியம் ஒன்று நேர்ந்திருப்பதால்
குறுமதியினரின் குருதி நீரையே
கோடைகாலத் தண்ணீராகக் குடிக்கிறது!
அப்படிச் செய்கின்ற ஆற்றலினாலே
இப்படிப்பட்டவன் தமிழன் என்பதை
எல்லாச் சுவர்களிலும் எழுதிப் போடுகிறது—
எங்கும் உள்ள மனித நெஞ்சச் சுவர்களிலே!

6.3.93

## தமிழ்ச் செயல் ஒன்று ஈழத்தில் நடக்கிறது!

படித்துக் கொண்டு இருந்த பிள்ளையின்
படிப்பை இடையில் முறித்தான்;
துள்ளித் திரிய வேண்டிய பிள்ளையைப்
போர்க் குப்பாயத்துக்குள்ளே திணித்தான்;
இனிய பார்வைக்கு இலக்கணமான குழந்தையை
எரிகண் பார்வைகளையே எடுத்திடச் செய்தான்!

இவன் எதிரி இல்லை என்றால்
வேறு எவன்தான் அவர்களின் பெற்றோருக்கு எதிரி?
பெற்றோரும் பெரியோரும் பேச்சுவார்த்தை பண்ண,
பிஞ்சுக் குழந்தைகள் வீச்சு வாழ்வை எடுத்தார்கள்!
தொடங்கிய தொல்லையை எதிரிக்கும்பல்
சுருக்காக முடிக்காது என்று தெரிந்ததால்,—
அடுத்த தலைமுறை வாழ்வும் அதிலே
அழிய நேரும் என்று தெரிந்ததால்,—
சுறுசுறுப்பான குழந்தை உள்ளம்
துவக்கை எடுத்து இடக்கை மறித்தது!

எங்கே எங்கே என்று
ஆவலோடு கேட்கிறீர்களோ, அன்பர்கள்?
இங்கேதான், அருகிலேதான்,—ஈழத்திலேதான்!
எதிரியை ஒழிக்க எழுந்த வெடிநடை
இன்றைக்கும் நடக்கிறது இனிமைக்கு நடக்கிறது!
பகைமை எழுப்பிய பச்சை வெயிலை
மடக்கிப் பிடித்திடப் படை அங்கு நடக்கிறது!
இளமையை அழித்தால் தலைமுறை அழியும் என்று
எண்ணிய பகைவனின் எலும்பை எண்ணிடும்
இயல்பான தமிழ்ச் செயல் ஈழத்தில் நடக்கிறது!

6-3-92



## எழுதவில்லை நான், ஈட்டிகளை அடுக்குகிறேன்!

நான் எழுதவில்லை—
ஈட்டி முனைகளை எடுத்து எடுத்து அடுக்குகிறேன்;
ஈழத்தில் தயாராகும் கூர்மையான ஈட்டி முனைகள்!
அதாவது தமிழ்முனைப் போர்ச் செய்திகள்...

எழுத்துக்குப் பொருள்தேடி
இங்கே எல்லாம் அலைந்த பின்,
ஏதோ ஒரு மகிழ்ச்சி ஒலி
ஈழத்திலிருந்து கேட்டது—
இரும்பு ஆயுதங்கள் வடிக்கப்படும் ஒலி!
அதாவது, என் தமிழ் இளையவர்கள்,
தங்கள் தமிழ் முன்னோர்களின்
தறுகண் நடையை எடுத்திட்ட ஒலி!

புகழ்க்களமாகப் போர்க்களம் நடப்பதால்
புறப்பட்டு வருகின்ற செய்தி ஒவ்வொன்றும்
'புறமுதுகிட்டான் எதிரி' என்ற செய்தியே!
இதுவரை எந்தப் போரிலும்
இயற்றாத வீரங்கள் இயற்றினான் ஈழத்தான் என்று
என் குல எதிரிகள் வியந்துரைக்கும் செய்தியே!
இரண்டாயிரம் பேர் என்று கணக்கிடப்பட்ட புலிகள்
இரண்டு இரண்டு ஆயிரமாக எழுந்துவரும் செய்தியே!
இரண்டாயிர ஆண்டு வரலாற்றை
இனிமை புதுக்கிவிட்டார்கள் என்கின்ற செய்தியே!

ஆகவே நான் எழுதவில்லை
ஈட்டி முனைகளை எடுத்து எடுத்து அடுக்குகிறேன்!

6.3.92

## நான் விரும்பும் நல்லினிய செய்தி!

இன்னிசையை மூட்டைகட்டி வை!
இடுப்பொடிந்த பேச்சுக்களுக்குக் கல்லறை கட்டு!
ஈழத்தமிழ்ப் பேச்சை மட்டுமே என்னிடம் பேசு!

ஏன் இப்படி என்று கேட்கிறாயா?
ஈழம்தானே இன்றைக்கு
கேட்கத் தக்கதாகச் செய்தி படைக்கிறது?
ஈழந்தானே இன்றைக்கு
எடுப்பு எடுப்பான செய்தி தருகிறது?
இங்குத்திக்காரன்களைப் போல
எப்போதாவது விழித்துக் கொண்டு
பாராளுமன்றத்திலே வீரம் காட்டுகிறானா?
மற்ற மற்ற நேரங்களிலே எல்லாம்
தலைவன் அல்லாத தலைவனுக்கெல்லாம்
அட்டைவெட்டுப் படம்உயர்த்திக் கும்மி அடிக்கிறானா?
செய்தி அல்லவா தருகிறான் செய்தி;
செந்தமிழ் நெஞ்சங்களிலே
தேன்பாய்வது போலப் பாய்கின்ற
செய்தியை அல்லவா தருகிறான், ஈழத்தவன்!

பொய் சொல்லாமல் சொல்லு—
புகழ்ச்சி படைக்கின்ற ஒவ்வொரு நிகழ்ச்சியும்
மகிழ்ச்சி படைக்கவில்லையா உன் நெஞ்சத்திலே?
மறுபடி மறுபடி கேட்க வேண்டும் என்று
ஆசை வரவில்லையா உன் நெஞ்சின் ஆழத்திலே?

உன்னைப் போலத்தான் நானும்
ஈழத்துச் செய்தியை மட்டுமே கேட்க விரும்புகிறேன்!

**6-3-98**



## ஆசை பொழிகின்றேன் அகம் மகிழ்ந்து நிற்கின்றேன்!

கட்டிப்பிடித்துக் களிக்கூத்து ஆடுவேனோ?
அள்ளித் தழுவி ஆசை மழை பொழிவேனோ?
என் தமிழ் ஈழத் தம்பிகளையும்
அவர்களின் தோளுக்கு ஆற்றல் குவிக்கும்
அருமைத் தமிழ்ச் செல்விகளையும் கண்டுவிட்டால்
கட்டிப்பிடித்துக் களிக்கூத்து ஆடுவேனோ?—
நான் அள்ளித் தழுவி ஆசைமழை பொழிவேனோ?

இரண்டாயிரம் ஆண்டுகளாக இங்கே பிறக்காத
எல்லாக் குழந்தைகளின் வடிவமும் ஆக
ஈழத்திலே பிறந்திருக்கிறார்கள் தமிழ்க் குழந்தைகள்!
தமிழ்ப் பிள்ளை என்றால் அவன் போர்ப்பிள்ளை;
சரியாத வரலாறு சொல்லுவது இந்த உண்மை!
இதை மறைத்துக் கிடந்த இலை தழைகளை
இழுத்துக் கீழே தள்ளிவிட்டு
எழுந்து நின்று சிரிக்கின்றன மலர்கள்;—
ஈழத்து ஆண்—பெண் குஞ்சு மலர்கள்!

காணாத கனிவுகள் கண்டிட்டால்
களிப்புற்றுக் குதிக்காதோ தமிழ் நெஞ்சம்?
கேளாத தேன் செய்திகள் கேட்டிட்டால்
கிறுகிறுத்துக் களிக்காதோ தமிழ் நெஞ்சம்?
புகழ்ச் செய்திகளை நெய்து நெய்து அனுப்பிடும்
புதிய தமிழ்ப் பிறவிகளைக் கண்டால்
கட்டிப் பிடித்துக் களிக்கூத்து ஆடமாட்டேனோ?
அள்ளித் தழுவி ஆசை மழை பொழிய மாட்டேனோ?

**6-3-98**

## தேர்ந்தெடுத்து
## நெஞ்சிலே நிறையுங்கள்!

தேர்ந்தெடுக்கத் தெரிய வேண்டும்;
திருத்தமான குறிக்கோளை மட்டுமல்ல,
தித்திப்பான உறவினர்களையும்
சீராகத் தேர்ந்தெடுக்கத் தெரிய வேண்டும்!

குறிக்கோள் தவறு தோல்வியில் தள்ளுகிறது;
உற்றார் தேர்விலுள்ள குளறுபடி
மனிதனை விரக்தியில் கொண்டுபோய்த் தள்ளுகிறது!
உற்றாரை யான் வேண்டேன் என்று ஓடியவன்
உற்றார் தேர்வில் தோற்றுப் போனவன்;
அது மட்டுமல்ல, அதனாலேயே—
குறிக்கோள் தேர்விலும் குறைப்பட்டுப் போனவன்!

என்னைப் பாருங்கள்,—எழுந்து நிற்கிறேன்:
இதயம் நிறைய உறவினர்களை
ஈழம் தந்த மறவர் மக்களை
இருகை விரித்து அள்ளிக் கொள்ளுகிறேன்!
துப்பாக்கி ஏந்துகிறேன் என்றான்;
தோள்கள் இரண்டும் பூரித்தேன்!
துச்சமெனப் பண்ணிவிட்டேன் பகையை என்றான்;
துவண்ட நெஞ்சும் நிமிர்ந்துநிற்கக் கண்டேன்!
வாழ்க்கையை விரும்ப, மக்களை விரும்ப
வகைசெய்து கொண்டேன் என்றால்,—
உற்றார் உறவினர் தேர்விலே உறுதியாக இருந்தேன்;
உயர் ஈழப் புலிகளே உறவு என்று கொண்டேன்!

தெரியவேண்டும், உறவினர்களையும்
நேராகத் தேர்ந்தெடுத்துக்கொள்ளத் தெரிய வேண்டும்!

7-3-93



## சிற்றில் இழைக்கும்
## திருந்திய தோள்கள்!

வருகின்ற ஒவ்வொரு செய்தியும்
மகிழ்ச்சிச் செய் தியாக இருக்க வேண்டுமானால்,
நல்ல குறிக்கோளில் நடக்கின்ற
நாலைந்து தம்பி தங்கைகள் இருக்க வேண்டும்,
எனக்குக் கிடைத்திருப்பவர்களைப் போல—
ஈழத்தின் இளைய தம்பிகள் தங்கைகள் போல!...

என்ன செய்கிறார்கள், பார்க்கிறாய் அல்லவா?
இருட்டையும் ஊடுருவிப் பார்க்கிறார்கள்;
மாற்றார் இதயத்திலும் ஊடுருவி நிற்கிறார்கள்!
சிற்றில் விளையாடும் வயதிலேயே
திருத்தமான தோள்களைப் பெற்றிருக்கிறார்கள்,—
தீங்கு தடுக்கும் தீரம் மிக்க இரண்டு தோள்கள்!

ஒன்பது கழுதை வயதாகியும்
உரிமை என்றால் என்ன என்று தெரியாமல்
ஊர்ந்து திரியும் தமிழகப் புழுக்களின் மத்தியில்,
ஓங்கிய வேழங்கள் பிடிகள் என் தம்பிகள், தங்கைகள்!
உவகையிலே நான் மிதக்கிறேன் என்றால்,
ஒரு நாளும் இல்லாத திருநாள் நடக்கிறது ஈழத்தில்;
ஒவ்வொரு நாளும் உதயமாகிறது இதயத்தில்!
அத்தனை செயல்கள், அத்தனை புதுமைகள்,
அழிவின் முனையிலும் அழகிய சிரிப்புக்கள்!

இவர்கள்தான் இளையவர்கள்—
யான் பெற்ற ஈழத்து இளையவர்கள்!...
எனவே இனிக்க இனிக்கச் சொல்லுகிறேன்:
யான் பெற்ற பெருமிதம் பெறுக என் தமிழர்கள்!

7-3-93

## வெடியோசை கூட
## மிகவாக இனிக்கிறது!

தேன் சிட்டுக்கள் —அவர்கள் தேன் சிட்டுக்கள்—
தென்தமிழ் ஈழத்தின் என் தமிழ் இளவல்கள்
தேன்சிட்டுக்கள், செந்தேன் சிறு சிட்டுக்கள்!

தோளிலே துவக்கு எடுத்தார்கள்—
சுட்டுத் தள்ளுகிறார்கள் என்று சொல்லுகிறார்கள்;
கிட்ட நெருங்கிப் பார்த்தால்—
கீழே விழுந்து கிடப்பவை
கிறுக்குப் பிடித்த தலைகள்,—ஆணவக் கிறுக்கு!
தேர்ந்தெடுத்து இப்படி மகிழ்ச்சி பரப்ப
தேன் சிட்டுக்களல்லாது வேறுயார் அறிவார்கள்?

இரத்தக் களரி பண்ணிவிட்டார்களே என்று
ஏங்கிப் பதைக்கிறார்கள் இங்கே சிலபேர்கள்;
பண்ணாமல் என்ன செய்வார்கள்?
பரந்து திரியும் விரிந்த வானத்தில்
மடத்தனமாக வேலிகள் போட்டு
வழித்தட நடைக்கு வெடி வைப்பவர்களைக்
கொலை பண்ணாமல்
அள்ளி எடுத்துக் கொஞ்சவா செய்வார்கள்?

அழிம்புக்காரனைக் கண்டு ஓடி ஒளிப்பவர்கள்
அழகில்லாதவர்கள், அருவருப்பானவர்கள்;
மட்ட மடையர்களை வெட்டிச் சரிப்பவர்களே
மணிச் சிட்டுக்கள், மனத்தில் இனிக்கும் தேன்சிட்டுகள்!
இந்தச் சிட்டுக்களே இன்று ஈழத்துச் சிட்டுக்கள்!
எனவே அவர்களின் இளந்தோள் ஏந்திய
துப்பாக்கி வெடிப்பும் என் நெஞ்சேறி இனிக்கிறது!

7-8-92



## கிழங்காகக் கூட
## இருக்கலாம் மனிதர்கள்!

கிழங்காகத்தான் இருப்பது என்றால்,
சக்கரைவள்ளியாக இருக்க வேண்டும்;
அதாவது சீனிக்கிழங்காக இருக்க வேண்டும்!
பக்குவத்தின் பிறகு மட்டுமல்ல—
பச்சையாக இருக்கும்போதே தின்னலாம் அல்லவா?
ஆமாம், மனிதர்களையும்தான் சொல்லுகிறேன்—
வள்ளிக் கிழங்குகளாக இருக்க வேண்டும்:
பயிற்சி பெற்றால்தான் போர்க்களம் போகலாம் என்ற
பசலைக் கொடிகளாக இல்லாமல்,
எடுத்த எடுப்பிலேயே ஏகலாம் அங்கே என்ற
இருதோள் மறவர் மறத்திகளாக
இருந்திட வேண்டும் இங்குள்ள மனிதர்கள்!
பசிமாற்றச் சாப்பிடப்
பக்குவப்பட்ட உணவு தேட முடியாது;
பகை வந்ததும் எதிர்த்திட
பயிற்சி பெற்றவர்களுக்குக் காத்திருக்க முடியாது!
இந்தப் பாடம் மட்டும் தெரிந்தால்
எல்லாப் பாடமும் தண்ணீர்ப் பாடமே!
படிக்க வேண்டிய இந்த ஒரு பாடத்தைப்
படித்து வைத்தார்கள் ஈழத்து இளவல்கள்;
முடித்து வைத்தார்கள், பகையை
வள்ளிசாக முடித்து வைத்தார்கள்!
இயற்கையில் சீனிக்கிழங்கு கிடைத்தது,
ஈழத்தில் வற்றாத தமிழ்வீரம் கிடைத்தது!
கிழங்காகத்தான் இருக்க வேண்டும் என்றால்
மனிதர்கள் சீனிக்கிழங்காக இருக்க வேண்டும்!

7-8-92

## இந்தியத் தமிழ்த்தாய்க்கு இல்லையே முழுமகிழ்ச்சி!

தாயாக இருப்பது மகிழ்ச்சியாகத்தான் இருக்கிறது
ஆனாலும் ஈழத்துத் தாயாக இல்லையே என்னும்
ஏக்கம் இருந்துகொண்டேதான் இருக்கிறது:

மக்களைப் பெற்றபோது மகிழ்ந்தேன்;
மழலை கேட்டபோதும் மகிழ்ந்தேன்;
மக்கள் வளர்ந்து ஆளானபோது—
'உன் மகன் எங்கே இருக்கிறான்?' என்று
யாரோ அடையாளம் கேட்டபோது—
'உரிமை காக்கும் போர்க்களத்திலே
ஓங்கி நிற்பான், போ!' என்று
ஒரு தடவை கூடச் சொல்ல முடியவில்லை!...

இந்தப் பெருமை
ஈழத்தின் ஒவ்வொரு தாய்க்கும் கிடைக்கிறபோது
எனக்குக் கிடைக்கவில்லையே என்கிற ஏக்கம்
என் உள்ளத்தில் இருந்துகொண்டுதான் இருக்கிறது!

மலர்முகம் கண்டேன் மழலையும் கேட்டேன்,—
'மறவன் உன் மகன், மறத்தி உன் மகள்'
என்கின்ற இனிய சொல்
எவர் ஒருவரும் சொல்லவே இல்லை!

எனக்குக் கிடைக்காத இது
எல்லோருக்கும் இல்லை என்றால்
என்னை நானே தேற்றிக் கொள்ளுவேன்...
இல்லையே,—அப்படி இல்லையே!
ஈழத் தமிழ்த் தாய்க்கு இருக்கிறதே அந்தப் பெருமை
இது ஏக்கம்,—இந்தியத் தமிழ்த் தாயாகிய என் ஏக்கம்!

7-3-92



## ஈழத்துப் புலிகளுடன் இருபத்தெட்டு நாள்

# பிற்சேர்க்கை

9.2.92க்கு முன்னும் 7.3.92க்குப் பின்னும்
புலிகளைப்பற்றிச் சாலையார் எழுதியவை உண்டு,
எண்ணிறந்த கட்டுரைகள், பாடல்கள்,
உரைவீச்சுகள்!
அவைகளில் சில, மிகச்சில இங்கே...

# இந்தியா, திரும்பி வா!

*யாரைக் கேட்டு நீ இறங்கினாய் அங்கே?*
*யாருக்காகப் போர் எடுத்தனை தமிழ்மேல்?*
*பட்டா இந்திய மனிதக் கொலைஞனே,*
*படாத பாடுகள் படுநீ அங்கே!*

*சாவு என்பது தமிழன் கதையில்*
*சாதாரணம், மிகச் சாதாரணம் காண்!*
*கொலையைச் செய்தால் குனிவான் என்றே*
*குறுக்குக் கணக்குப் போட்டாய், குறைந்தாய்!*
*ஒரே ஒரு தமிழன் உள்ளவரையில்,*
*உதிரம் ஒருசொட்டு உள்ள வரையில்*
*நிற்பான் நிமிர்ந்த நெடுங்குன்றாக-*
*நிலைத்த புகழோன் அவனே தமிழன்!*

*அவனை அறியா ஆணவத் தாலே*
*அங்கே ஈழத்தில் வாலை நீட்டினாய்!*
*வெட்டுப்பட்டது வால் மட்டுமல்ல-*
*மென்னியும் வெட்டுக் காயம் பட்டது!*

*வெறிகொண்டு சென்றாய்-பழிகொண்டு நின்றாய்;*
*மீதி இருக்கின்ற மானத்தோ டாவது*
*மீண்டுவா இந்தியா,—போதும் நீ மீண்டுவா!*

*1-12-1987*

## இறைமையை மீட்காமல் ஈழப் போர் நிற்காது!

ஒரே ஒரு தமிழன் உள்ள
வரையிலே போர்நடக்கும்;
ஈழத்தில் இது நடக்கும்!
சரேலெனப் பாய்ந்து சென்ற
தடியடி இந்தியத்தின்
தலையிலே போர் நடக்கும்!
உரிமையை மீட்டெடுக்கும்
வரையிலே போர் நடக்கும்;
ஈழத்தில் இது நடக்கும்!
'சரி'யையே முறித்துப் போட்ட
தறிகெட்ட இந்தியத்தின்
தலையிலே போர் நடக்கும்!
இழுக்கெல்லாம் வெளியே தள்ளும்
வரையிலே போர் நடக்கும்;
ஈழத்தில் இது நடக்கும்!
கொழுத்துப் போய் நடைபிறழ்ந்த
கொலைவெறி இந்தியத்தின்
கூந்தலில் போர் நடக்கும்!
வரலாற்றைச் செப்பம் செய்யும்
வரையிலே போர் நடக்கும்;
ஈழத்தில் இது நடக்கும்!
நரவேட்டை யாடுகின்ற
இந்திய அரசாங்கத்தின்
தலையிலே போர் நடக்கும்!
பேரின வாதம் வீழ்ந்து
போ'ம்வரை போர் நடக்கும்;
ஈழத்தில் இது நடக்கும்!
ஊரினை ஏய்க்கும் இந்து
தேசத்தின் நெஞ்சின் மீதே
உரிமைச் செம்போர் நடக்கும்!

*1-3-1988*



## எலும்புக் கூடுகள் அல்ல, தமிழ் வீர ஏறுகள் வேண்டும்!

ஆமாம், சொல்லுகிறேன்,—அடித்தே சொல்லுகிறேன்;
ஏழரைக் கோடி எலும்புக் கூடுகள் வேண்டாம்,-
தமிழர்கள் என்ற பெயரிலே
ஏழரைக் கோடிகள்—எலும்புக் கூடுகள்—வேண்டாம்!

இடுப்பு ஒடிந்த ஏழரைக் கோடிக்குப் பதிலாக
இரண்டே இரண்டு கோடி போதும், தமிழர்கள்!
எஞ்சிய வெறும் எலும்புகளை—
ஏ. கே. 47க்கு இரையாக்குங்கள்,
எரிகுண்டு போட்டுக் கரிமலை குவியுங்கள்!
ஆமாம், சொல்லுகிறேன்,—அடித்துச் சொல்லுகிறேன்—
ஆறுகோடி ஏழுகோடி என்கின்ற
அழுக்குத் தொகைகள் தமிழர்க்கு வேண்டாம்!

உருப்படியாக இருந்தால் ஒரே ஒரு கோடி போதாதா?
உலகத்தையே கலக்குகின்ற உயர்வீர ஈழப்புலிகள்
ஒரு இலட்சம் பேர் கூட இல்லையே—
அவர்கள், இரண்டே இரண்டு ஆயிரங்கள் தானே?
தமிழ்வீரக் கொடியை அவர்கள்
தாரணியின் உச்சி மேட்டிலேயே ஏற்றிவிடவில்லையா?

ஆமாம், சொல்லுகிறேன்,—அடித்தே சொல்லுகிறேன்:
தமிழர்கள் என்ற பெயரிலே
ஏழரைக் கோடி எலும்புக் கூடுகள் வேண்டவே வேண்டாம்!

*19.1.1993*

## 247 தமிழ் எழுத்தும் ஈழத்தின் வீரம் பாடவே!

ஈழத்தமிழர் புகழ் பாடுகின்றேன்;
என் தாய்த் தமிழிலே உள்ள
247 எழுத்துக்களாலும் அதையே பாடுகின்றேன்!

ஏன் அப்படி என்று கேட்கமாட்டீர்கள்,—
ஏன் என்றால்,—
உலகத்துக்குத் தெரிந்திருப்பது,
உங்களுக்கும் நன்றாகவே தெரிந்திருக்கிறது:
இலக்கியத்துக்குப் பாடுபொருள்—
இதயத்தை அளாவி எழுகின்ற வீரப்பொருள்—
இங்கே கிடைக்கவில்லை,—ஈழத்திலே கிடைக்கிறது!...

'எழுதுவது என்றால் வீரம் எழுதவேண்டும்' என்று
இலக்கணம் வகுத்துக் கொண்டவன் ஆதலால்,—
என் தமிழ் எழுத்துக்கள் அனைத்தினாலும்,—
அவைகளால் வரும் சொற்கள் அனைத்தினாலும்,—
ஈழமே பாடுகின்றேன்,—அதன் வீரமே பாடுகின்றேன்!

எதையோ எதையோ எழுதி எழுதி
எழுதுகோலையே அசிங்கப்படுத்துகிறவர்களே,
இங்கே வாருங்கள்,—எழுந்து நின்று பாருங்கள்;
ஈழமே எழுதத்தக்கது என்னும் உண்மை தேருங்கள்!...

நான் பாடுகின்றேன்,—அன்றாடம் பாடுகின்றேன்—
என் தாய்த் தமிழிலே உள்ள
247 எழுத்துக்களாலும் ஈழத்தையே பாடுகின்றேன்!

20.3.1992



## அதியனின் வீரர்களுக்கு அமுதக்கனி கொடுத்தவர் யார்?

அமுத நெல்லிக்கனியை
அவ்வைக்கு மட்டுந்தானே கொடுத்தான் அதியமான்?—
அப்படி என்றுதானே சொல்லுகிறது நமது புறநானூறு?
அதியனின் வீரர்கள் அத்தனை பேரும்,—
அன்றிருந்த மேனி அழியாமல்—
இன்றும் எழுந்து நிற்கிறார்களே, எப்படி?

கல்மலை போன்ற அதே தோள்கள்—
கனல் கிண்ணம் போன்ற அதே கண்கள்—
இவர்கள் அதியமானின் வீரர்கள்;
யார் கண்டாலும் இதைத்தான் சொல்லுவார்கள்;
இவர்கள் தமிழ்வீர அதியமானின் இளைய வீரர்கள்!

அமுதக்கனி பெற்ற அவ்வையம்மை,
அங்கிருந்து போகும்போதே
வீரத்தம்பிகள் ஓடிவந்து சூழ்ந்து கொண்டார்களோ?
விள்ளல் விள்ளலாக அந்த அமுதக்கனியை
வீரத்தின் அந்த வளர்தளிர்களுக்குக்
கிள்ளிக் கிள்ளி
வாயிலே கொடுத்துவிட்டு,—மனமார வாழ்த்திவிட்டு,
அப்பால் சென்றாளோ எங்கள் அவ்வையம்மை?

இல்லாவிட்டால் எப்படி?—
ஈழத்தில் அந்த அதியமானின் வீரர்கள்
இன்றைக்கு இப்படி எழுந்துநிற்கிறார்களே, அது எப்படி?

22.3.1992

## இவனைத் தான்
## தமிழன் என்பார்கள்!

*காடுகளை அழிப்பவன் மட்டுமல்ல,*
*களைகளைப் பிடுங்கி எறிபவன் தமிழன்!*
*நாகரிகம் எழுப்பியவன் மட்டுமல்ல,*
*நஞ்சுகளைப் புதைத்து ஒழிப்பவன் தமிழன்!*
*தாலாட்டுப் பாட்டுக்கு மட்டுமல்ல—*
*சமர்க்களப் பாட்டுக்கும்*
*தன் இதழில் புன்னகை எடுப்பவன் தமிழன்!*

*அழிவைச் செய்துதான் இங்கே*
*ஆக்கத்தை எழுப்பவேண்டும் என்றால்—*
*என்றைக்கும் அதற்கு அணியமாய் இருப்பவன் தமிழன்!*

*வாடிக் கிடக்கும் தமிழ்க் கொம்பிலே*
*வாடாத தளிர் ஒன்று வெடித்தது என்றால்—*
*தமிழ் ஈழக் குட்டி நாட்டில் மட்டுமல்லாமல்*
*தாரணி எங்கும் அது ஒளிசிரித்தது என்றால்—*
*இதுதான் வரலாறு, எழில்தமிழ் வரலாறு!*

*இருக்கும் போதும் புகழோடு இருப்பவன்;*
*இறந்த பிறகும் அதிலேயே வாழ்பவன்:*
*இவன்தான் தமிழன், என்றைக்கும் தமிழன்!*

**18.4.1992**



1550 / JUNE 2010